# முன்னுரை

வித்துவான் தாண்டவராய முதலியார் இப் பஞ்சதந்திர வசனத்தை எழுதி வெளியிடு முன்னரே பஞ்சதந்திரக் கதைகள் செய்யுள் ரூபமாக வீரமார்த்தாண்ட தேவரென்னும் பெரியாரால் இயற்றப்பட்டு வழங்கி வந்தன. அந்நூலிடத்துக் காணத்தக்க குறையெல்லாம் அது செய்யுள் நடையி லமைந்துள்ள தென்பதே. மற்று அஃது இனிய எளிய நடையில் அழகுற இயற்றப்பட்டுள்ளது. ஆயினும் செய்யுள் செய்யுளே, வசனம் வசனமேயன்றோ. இள மக்கள் கற்றற்கென் றேற்பட்ட நீதிக் கதைகள் செய்யுள் நடையிலிருத்தலை விட வசன நடையி லிருப்பின் பன்மடங்கு அதிகமாகப் பயன்படுமென்பது சொல்லாமலே யமையுமன்றோ. தமிழ்மொழி யிடத்தும் அம்மொழி கற்கும் பிள்ளைகளிடத்தும் ஆர்வமிக்க வித்துவான் தாண்டவராய முதலியார் பஞ்சதந்திரக் கதைகளை வசனமாக எழுதி வெளியிட்டவுடனே செய்யுட் பஞ்சதந்திரம் வழக்கழிந்து மறைந்தது. இக்காலத்து, பஞ்சதந்திர மென்னும் பெயர் கேட்ட மாத்திரையிற் செய்யுளை நினைப்பவர் எவருமிலரென்று துணிந் துரைக்கலாம்.

பஞ்சதந்திரக் கதைகளைத் தமிழில் வசனமாக எழுதியோர் வித்துவான் தாண்டவராய முதலியாரையன்றி வேறுளரோ என்றறிய விரும்புவோர் துரைத்

தனக் கீம்ப்புலக் கையெழுத்துப் புஸ்தகசாலைத் தமிழ் நூல் விவாம முதற புத்தகத்தைப் புரட்டிப் பார்ப்ப ராயின் உளரென்றறியார்திரார். அப் புத்தகத்துள் பஞ்ச தந்திர வசனங்கள் இரண்டுள வென்றும், இரண்டும் வித்து வான் தாண்டவராய முதலியார் எழுதியனவே யென் றுங் காட்டப்பட்டுளது. இரண்டற்கும் பல பேதங் கள் தோன்றுகின்றன. ஒன்று அச்சிட்ட பிரதியோ டொத்திருக்கிறதென்று சொல்லப்பட்டது; ஒத்திரு க்குமாயின் அப் பிரதி இப்பொழுது அகப்படுதல் இல்லை யெனல் வேண்டும். கி. பி. 1826-ல் அச்சிடப்பட்ட பழம் பிரதியே சிறிது மாற்றப்பட்டுப் பல முறையும் பலராலும் பஞ்சதந்திரமென அச்சிடப்பட்டுள்ளது. அப் பிரதிக்கும் முற்குறித்த கையெழுத்துப் பிரதிகட் கும் ஒற்றுமை மிகச் சிறிதேயாகும். வித்துவான் தாண்ட வராய முதலியார் தம் காலத்தேயே பஞ்சதந்தி ரத்தை அச்சிட்டு வெளியிட்டிருந்தும் இவ்வித மயக்க வுணர்ச்சிகள் தோன்றுதற்குக் காரணம் புலப்படவில்லை. மற்று, அவர் தம் பாயிரத்துட் குறித்த பிரதி இக் கை யெழுத்துப் பிரதிகளுள் ஒன்றுதல் கூடும்.

இவ் வகையாகச் செய்யுள் நடையிலும் வசன நடையிலும் பஞ்சதந்திரக் கதைகள் பல ஏற்பட்டிருப்பி னும் வித்துவான் தாண்டவராய முதலியார் எழுதிய பஞ்சதந்திரமே பெருவழக்காய் எல்லாராலும் மெச்சப் படுவதாயிற்று. தமிழ்மொழியை நன்கு கற்க முயன்ற ஆங்கிலருட் சிறந்த கால்ட்வெல் ஆசிரியர், பத்தொன்ப

உரைநடையொன்று தோன்றியிருக்கிறது, அதுதான் உலகவழக்கை யனுசரித்த அழகிய வசன நடையாகும். ஐரோப்பியரது கொள்கைகள் பரவி வருவதனால் இனி எழுதப்படும் தமிழ் நூல்களில் இதுவே செய்யுணடை யோ டிகலி மேற்படத்தக்கதா யிருக்கின்றது. இந்நடைக்குக் கர்த்தா வென்று சொல்லத்தக்கவர் ஒருகாலத்துச் சென்னைக் கலாசாலையில் உபாத்தியாயராயிருந்த தாண்டவராய முதலியார் என்பவர்; அவர் பெயர் ஞாபகத்தில் வைக்கத்தக்கது. பஞ்சதந்திரத்தைத் தமிழ் வசன நடையில் நமக்கு எழுதி யுபகரித்தவர் அவரே; அவர் வழிகாட்ட இராமாயணம், மஹாபாரத முதலிய நூல்களும் வசனங்களாக வெளிவந்துள்ளன; இவை யனைத்தும் பஞ்சதந்திரம்போலவே ஆற்றொழுக்கான திருந்திய நடையில் எல்லார்க்கும் நன்கு விளங்குமாறு எழுதப்பட்டுள்ளன "* என்று கூறினர்.

பஞ்சதந்திரம் ஆதியில் வடமொழியாகிய ஸம்ஸ்கிருதத்தில் எழுதப்பட்டது. அதனைப்பற்றி ஸம்ஸ்கிருத நூலாராய்ச்சி வல்ல மக்டாநல் என்பவர் எழுதுமாறு: " ஐந்து பகுதிகளை யுடைமையாற் பஞ்சதந்திரமென்று பெயர்பெற்ற இந் நூல், நீதிகளையுணர்த்தும் சுலோகங்களை இடைப்பெய்து வசனநடையி லெழுதப்பட்ட கதைகளா லாகியது. இஃது இன்னகாலத்துத் தொகுக்கப்பட்டதென்று வரையறுத்துரைத்த லியலாது. ஆயினும் இது, சதுரங்கமென்னும் ஆட்டத்தைப் பாரசீக நாட்டினர் இந்தியரிடங் கற்றுக்கொண்ட ஆறாம் நூற்றாண்டில் கோஸ்ரு அநூஷீர்வான் என்னும் அரசன்

---

* A Comparative Grammar of the Dravidian Languages, 1875. Introduction, Page 150.

(கி. பி. 531—579) கட்டளையால் அந் நாட்டில் அக் காலத்துச் செய்யுள்மொழியா யிருந்த பெஹ்லெவியில் மொழிபெயர்க்கப்பட்டது. பெஹ்லெவி மொழிபெயர்ப்பு இப்போது இறந்துவிட்டதாயினும், அதனுடைய மொழிபெயர்ப்புக்களாகிய 'கலீலக தமனகம்' (கி. பி. 570) என்னும் ஸிரியக் பாஷை நூலும், 'கலீலஹ திம்நஹம்' (கி. பி. 760-க்கு முன்) என்னும் அராபிபாஷை நூலும் இன்னும் உள்ளன. இந்நூல்களால் பூர்வ ஸம்ஸ்கிருதரூபம், சில வருஷங்கட்கு முன் (1904) முதன் முதல் அச்சிடப்பட்ட தந்திராக்கியாயிக* மென்னும் நூலகத்துச் செவ்வையாக அமைந்துள்ளதென்பது விளங்கும். இத் தந்திராக்கியாயிகமே பஞ்சதந்திரத்திற்குத் தற்காலத்தில் அகப்படும் சரியான பாடம். இது கி. மு. இரண்டாம் நூற்றாண்டில் வைஷ்ணவ பிராமணனொருவனால் காஷ்மீரநாட்டில் எழுதப்பட்டதாகத் தெரிகிறது. மற்றைப்படி பஞ்சதந்திரத்திற்குத் தக்ஷிண பாடமென்றும் உத்தரபாடமென்றும் இரண்டு பாடங்களுண்டு; உத்தரபாடத்தில் இரண்டுவகை யுண்டு: ஒன்று சுருங்கியது, மற்றொன்று விரிந்தது. தக்ஷிணபாடமே பூர்வ பஞ்சதந்திரத்தினின்றும் அதிகமாக மாறுபடாததாயிருக்கிறது; ஏனெனில், அது ஸிரியக் மொழிபெயர்ப்போடு பெரும்பான்மை ஒத்திருக்கிறது. பஞ்சதந்திரக் கதைகளிலனேகம் பழைய பௌத்த கிரந்தங்களிலும் காணப்படுகின்றன. நீதி புணர்த்த எழுந்த கற்பனைக் கதைகள் பௌத்தருள் ஆதி தொட்டே வழங்கி வந்தன; அவற்

---

* தொல்காப்பியம் பொருளதிகாரம் செய்யுளிய லுரையில் (பக்கம் 743) தந்திரவாக்கிய மெனப்பட்டது இதனுடைய தமிழ் மொழிபெயர்ப்பேபோலும்.

றுள் அநேகம் புத்தரது பூர்வ ஜன்மங்களைப் பற்றியன வாகும்; ஆதலால் அவை ஜாதகங்க ளெனப்படும். இந்த ஜாதகங்களில் ஒரு தொகுதி, கி. பி. ஐந்தாம் நூற் றுண்டுவரை,(பாளி கிரந்தங்களில் ஒரு பாகமாகிய) சுத்த பிடகத்தில் உள்ள ரூபத்தை யடையவில்லை யாயினும், அதற்குமுன் கி. மு. நான்காம் நூற்றுண்டிலேயே வழ ங்கிவந்ததாகத் தெரிகிறது. இத் தொகுதியில் பஞ்ச தந்திரத்திலுள்ள கதைகள் பல காணப்படுகின்றன. அவற்றுள் ஒன்றிரண்டு, பௌத்தாலயங்களில் கி. மு. 200-ம் ஆண்டிற் செய்யப்பட்ட சிற்பவேலைகளி லமைக் கப்பட் டுள்ளன. ஆயினும் இப்பொழுது வழங்கும் பஞ்சதந்திரம் வைதிக கிரந்தமே, அஃது ஆதியிலும் பௌத்த நூலன்று என்பதற்குப் போதிய சான்றுளது. பஞ்சதந்திரத்தின் உத்தரபாடங்க ளிரண்டும் ஜயின சம் பந்த மடைந்துள்ளன; இது கி. பி. 950-க்கும் 1300-க் கும் இடையில் நிகழ்ந்திருக்கவேண்டும். பூர்வ பஞ்சதந் திரம் தற்காலத்துப்போல ஐந்துபகுதிகளாகவே பகுக்கப் பட் டிருக்கவேண்டு மெனச் சொல்லலா மாயினும் அதனுடைய பெயர் வேறுயிருந்திருக்கலாம். பழைய ஸிரியக் அராபி மொழிபெயர்ப்புக்கட்கு அமைந்த பெயர்களால், ஆறும் நூற்றுண்டில் அது முதற்றந்திரத் தில் முக்கிய பாத்திரங்களாகிய கரடகன் தமனக னென் னும் நரிகளின் பெயர்களினுல் வழங்கியிருக்கலாம் என் றெண்ண இடமுண்டு.

“மக்களுக் குரிய குணங்களையும் தொழில்களையும் விலங்குகளுக் கேற்றிக் கூறிப் பஞ்சதந்திர முழுதும் ஒரு வித நகைச்சுவை நிரம்பியுள்ளது. எவ்வாறெனில், மிரு

கங்கள் வேதங்களை யோதுகின்றன; சந்தியாவந்தன முதலியன செய்கின்றன; தேவர், முனிவர், வீரர்களைப் பற்றி வார்த்தையாடுகின்றன; நுட்பமான நீதி சாஸ்திர விதிகளை எடுத்துப் பேசுகின்றன. இச் சமயங்களில் திடீரென்று அவற்றின் இயற்கைக் குணம் வெளிப்படுகின்றது. பிராமணரது வஞ்சகமும் பேராசையும், அரச சபையிலுள்ளாரது படிற்றொழுக்கமும், பெண்களது ஒழுக்கத் தவறும் முதலாகிய பலவித துர்க்குணங்கள் பழிக்கப்பட்டும் கண்டிக்கப்பட்டு முள்ளன. இந்தியரது மற்ற நூல்வகைகளுட் சாதாரணமாயுள்ள புனைந்துரைக்கு மாறாக இதனுள் உயிர்வாழ்க்கையின் உண்மை நிலைமைகளை நேராக எடுத்துரைத்தல் மிக்குளது.

"பஞ்சதந்திரம் தூரதேசங்களிலும் பல நூல்கள் உண்டாவதற்குக் காரணமா யிருந்திருக்கிறது; மேற் கூறிய அராபி மொழிபெயர்ப்பிலிருந்து மற்றுப் பல பாஷைகளிலும் வித்யாபதிகதை (The Fables of Bidpai or Pilpay) யென்ற பெயருடன் மொழிபெயர்க்கப்பட்டு, எட்டாம் நூற்றாண்டு முதற் பதினாறும் நூற்றாண்டு வரையுள்ள இடைக்காலத்தில் ஐரோப்பா முழுதும் பரவிற்று. பின்னர், இவைகளில் அநேகம் பிரசித்திபெற்ற லா பாண்டேன் கதைகளிற் (Fables of La Fontaine) புகுந்தமைந்துள்ளன."*

வடமொழிப் பஞ்சதந்திரம் இந்தியாவிலுள்ள பாஷைகளிலெல்லாம் மொழிபெயர்க்கப்பட்டுளது. தமிழ்ப் பஞ்சதந்திரத்தை இப்போது அச்சிட்டு வழங்

* Imperial Gazetteer of India, The Indian Empire, Vol. II. Page 250.

கும் வடமொழிப் பஞ்சதந்திரத்தின் நேர் மொழிபெயர்ப் பென்று சொல்லலாகாது. ஏனெனின், இவ் விரண்டுக்கும் பேதம் பெரிதுங் காணப்படுகின்றது. வடமொழிப் பஞ்ச தந்திரம் மகிலாரோப்யத் திருந்த அமரசக்தியென்னும் மன்னன் பிள்ளைகள் மூவர் மூடரா யிருந்தார்க்குப் புத்தி புகட்ட விஷ்ணுசர்மனென்னும் பண்டிதன் சொல்லிய தாகும். தமிழ்ப் பஞ்சதந்திரம் பாடலிபுரத்திருந்த சுதரிசனனென்னும் மன்னன் பிள்ளைகள் மூடர்களா யிருந்தார்க்குப் புத்தி புகட்டச் சோமசன்மனென்னும் பண்டிதன் சொல்லியதாகும். பின் மொழிந்த இவ் வரலாறு வடமொழி ஹிதோபதேசத்துக்குப் பொருந்தும். கதைக் கிரமங்களிலும், தமிழ்ப் பஞ்சதந்திரத்துக்கும் வடமொழி நூலுக்கும் வேற்றுமை யுண்டு. ஆகவே வித்துவான் தாண்டவராய முதலியார் தம் பஞ்சதந்திரத்தை வடமொழியினின்றும் இறக்கிச் செய்தாரல்லர். அவரே தாம் எழுதிய பாயிரத்து இதனை மகாராஷ்டிர பாஷையினின்றும் மொழி பெயர்த்ததாகக் கூறியுள்ளார். மற்று இம்மாதிரிப் பிறழ்வு கன்னட பாஷையிலுள்ள பஞ்சதந்திர மொன்றிலுங் காணலாகும்.

வித்துவான் தாண்டவராய முதலியார் கி. பி. 1829-ல் பிரசுரித்த பஞ்சதந்திர வசனம் பின் பலராற் பல முறை பிரசுரிக்கப்பட்டதென முன்னமே சொல்லப்பட்டது. துரைத்தனக் கல்வி யிலாகாத் தலைவரே ஒரு பதிப்பு வெளியிடுவித்தனர். முதற் பதிப்பையும் தற் காலத்துப் பதிப்பையும் வைத்து ஒப்பு நோக்குவோர்க்கு ஆங்காங்கே பல சொற்றொடர்கள் மாற்றப் பட்டிருத்தலும் பல சொற்கள் ஒழிக்கப்பட்டிருத்தலும்

புலப்படாமற்போகா. முதற்பதிப்பை நன்கு படிக்க அறியார் பல விடங்களில் தம்மனம் போனவாறு மாற்றி யுளரென்பதும் விளங்கும். உதாரணமாக, பக்கம் 62-ல் தனமத மென்பது அதன் மதம் என்றும், பக்கம் 87-ல் தானமானத்தினால் என்பது தாம் அபிமானத்தினால் என் றும், பக்கம் 112-ல் லேசமும் என்பது கிலேசமும் என் றும், பக்கம் 125-ல் இமமலையென்பது இம்மலை யென் றும் தவறாகத் திருத்தப்பட்டன. இனி, கடைசித் தந் திரம் கதை முடிவு சரியாக அமையப்பெற்றில தென்ப துணர்ந்த பதிப்பாசிரிய ரொருவர்,—இங்ஙனம் நேமி யானைத் தேற்றித் தன் மனைக்கேகினன் — என்பதை யடுத்து,—என்று தன் மனைவி யுரைப்பக்கேட்டுத் தேவ நாம வேதியனும் அவளை மூங்காவைக் குறித்து ஆகு லித்தலினின்றுந் தவிர்த்துத் தேற்றலும் அவள் தான் ஆராயாது செய்த செயல்பற்றி யிரங்க லொழிந்தனள் என்று ஊர்க் காவலனுரைப்ப மணிபத்திரன் முதலிய யாவருங் கேட்டுணர்ந்தேகினர்—என்பதைச் சேர்த்து முடித்தனர். வித்துவான் தாண்டவராய முதலியார் முன் தந்திரங்களைப்போலவே இதனையும் சோமசன்மாவின் கூற்றாகவே முடியாமை உற்று நோக்குவோர்க்கெல்லாம் புலப்படுவதே. ஆயினும் இப் பிழை வித்துவான் தாண் டவராய முதலியாரதேயன்று; வடமொழிப் பஞ்சதந் திரமும் இவ்வாறே முடிவு பெற்றிருக்கின்றது.

இப் பதிப்புப் பெரும்பான்மையும் முதற் பதிப் பையே தழுவிப் பிரசுரிக்கப் படுகின்றது. அநாவசிய மாக ஒழிக்கப்பட்ட சொற்கள் பெய்யப்பட்டன. அநா வசியமாக மாற்றியதாகத் தோன்றின இடங்களில் பழைய பதிப்பிற் கேற்பத் திருத்தங்கள் செய்யப்பட்

டன. சில கதைகளில் அநுசிதமாகத் தோன்றிய பாகங்கள் சிறிது மாற்றப்பட்டன. கடுஞ் சந்திகள் யாண்டும் ஒழிக்கப்பட்டன. தற்காலத்துப் பெரு வழக்காயிருக்கும் நிறுத்துக் குறிகள் வழங்கவேண்டிய கிரமப்படி வழங்கப்பட்டன. இனிக் கதைகளுக்கெல்லாம் எண் தந்திருப்பது தடவாமலே கதைகளைக் கண்டுபிடித்தற்கு அநுகூலமாயிருக்கும். கடுஞ்சந்திகளை யொழித்தபின் மாணவர்க்குக் கஷ்டந் தருவது அரும்பதங்களே யாகலின் அவற்றின் பொருளை விளக்கி அரும்பதவுரை யொன்று சேர்க்கப்பட்டுளது. இவ்விதமாகத் தற்காலத்து நிலவுறும் பதிப்புக்களனைத்தினும் அதிக உப்யோகமுள்ளதாக வேண்டும் இப் பதிப்பென்று கருதி இதனைப் பிரசுரிப்பவர்க்கு, வாசிப்பவர் அவ்வாறு காண்பாராயின், அதுவே திருப்தி தரும்.

## வித்துவான் தாண்டவராய முதலியார்

## சரித்திரம்

வித்துவான் தாண்டவராய முதலியார் செங்கற்பட்டு ஜில்லாவிலேயுள்ள இப்பொழுது வில்லியம்பாக்கம் என வழங்கும் வில்லிநல்லூரில் கந்தசுவாமி முதலியார் என்னும் சைவ வேளாளர்க்குக் கனிட்ட புத்திரராய்ப் பிறந்தார். இவரதிளமையிலேயே இவர் பிதா மரிக்க, பொன் விளைந்த களத்தூரிலிருந்த தமது அம்மான் குமாரசுவாமியுபாத்தியாயரிடத்து வளர்ந்து வந்தனர். அவரிடத்துத் தான் முதலியார் நெடுங்கணக்கு எண்சுவடி முதலியன கற்றது. அதன் பின்னர்த் தமிழ் மொழியிடத்துத் தமக்குள்ள ஆர்வம் அதிகரித்தலும், முதலியார் உழலூர் வேலப்ப தேசிகரிடம் இலக்கண இலக்கியம் பயின்றனர்; இவ் வேலப்ப தேசிகர் அந்தக கவி வீரராகவ முதலியார் பரம்பரையினர். இதன்பின் சென்னைமா நகரஞ்சென்று புதுவை விசுவநாத பிள்ளை, கூனிமேடு வித்வான் இராமாநுஜ முதலியார் இவர்களிடம் சிலகாலம் இலக்கியங்கள் பயின்று, தொல்காப்பியம் வரதப்பமுதலியாரிடமும் சீகாழி அருணாசலக் கவிராயர் பரம்பரையினராகிய சீகாழி வடுகநாத தம்பிரானிடமும் இலக்கணங் கற்றார். இவ்வாறு தமிழ்நூல்களைக் கற்றுப் புலமை நிரம்பியதோடமையாமல், ஸம்ஸ்கிருதம், தெலுங்கு, கன்னடம், உருது, மஹாராஷ்டிரம், ஆங்கிலம் முதலிய பிற பாஷை

களையுங் கற்றார். இவரது புலமைத் திறத்தைப்பற்றிக் கேள்வியுற்ற துரைத்தனத்தார், இவரைச் சென்னைத் துரைத்தனக் கலாசாலையிற் தமிழ்ப்புலவராய் நியமித்த னர். இவரோடு பண்டிதரா யிருந்தவர் கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர். சிலகாலஞ் சென்றபின் துரைத் தனக் கலாசாலை யெடுபடலும், இவர் கி. பி. 1843-ல் செங்கற்பட்டு ஜில்லா நீதிபதியாக நியமிக்கப்பட்டார். இவர் தேகவியோகமான வருடம் கி. பி. 1850 என்ப. வித்துவான் தாண்டவராய முதலியார் பஞ்சதந்திர வச னத்தை யன்றிக் கதாமஞ்சரி யென்றொரு வசன நூலும் எழுதினர். திருத்தணிகைமாலை, திருப்போரூர்ப்பதிகம். இலக்கண வினாவிடை என்பன இவர் இயற்றிய வேறு நூல்கள். இவர் திவாகரம் சூடாமணிநிகண்டு என்னும் நூல்களைத்திருத்தி அச்சிட்டனர். இன்னும், புரசைப் பொன்னம்பல சுவாமிகள் விவிலிய நூலைக் கண்டித்து எழுதிய வேத விகற்பமென்னும் நூலை மறுத்து எழுது மாறு வேண்டிய பாதிரிமார் வேண்டுகோட்கிணங்கி வேத விகற்ப திக்காரம் என்னும் நூலை யியற்றி முத்துசாமி பிள்ளை யென்பவர் பெயரால் அதனை வெளியிட்டன ரென்றும் கூறுகின்றனர்

முதற்பதிப்பு முதற்பத்திரம்

இஃது

தமிழ்த்தலைமைப்புலமை

நடாத்தும்

தாண்டவராய முதலியார்

மொழிபெயர்த்த

# பஞ்சதந்திரக் கதை



சாலிவாகன சக வருடம் ௲௭௱௪௰௭-க்கு
மேற் செல்லாநின்ற விய வருடத்திற்குச் சரியான
கிரீஸ்து ௲௮௱௨௰௬-ம் வருடத்திற்
சென்னைக் கல்விச்சங்கத்தச்சுப்
பதித்தது.

வித்துவான் தாண்டவராய முதலியார்

# பாயிரம்.

தமிழ் கற்கப்புக்கோர் தமிழிலெழுதி வழங்குகின்ற பஞ்சதந்திரக் கதையைக் கற்கப் புகுந்தாற் குளிக்கப்புக் கோர் சேற்றைப் பூசிக்கொண்டாற்போல வழுக்களையே கற் றுத் தடுமாற்ற முறுதலால் — சென்னைச் சங்கத்துத் தலைவரா கிய ம-௱-௱-ஸ்ரீ ரிச்சார்ட்டுக் கிளார்க்குத் துரையவர்கள் உத் தரவினால் — மஹாராஷ்டிரத்தி லச்சுப்பதித்திருக்கின்ற பஞ்ச தந்திரக் கதையைத் தமிழின் மொழிபெயர்த்துச் சொற்பொரு ளழகுறப் பலவிடத்துச் சில கூட்டியுங் கற்போருலக நடை யுஞ் சில செய்புணடையுமான தமிழ் நன்குணரவுஞ் சுவை யுற விம்மொழிபெயர்ப்புப் பஞ்சதந்திரக்கதை — சாலீவாகன சக௵ ௲௭௱௪௰௬க்கு மேற்செல்லாநின்ற பார்த்திவ ௵த் துக்குச் சரியான கிரீஸ்து ௲௮௱௨௰௫௵ செய்து முற்றுப் பெற்றது.

# பஞ்சதந்திரம்

## வரலாறு.

கல்விப் பொருளிலுஞ் செல்வப் பொருளிலுங் குறைவில்லாதவர்களுக்கு உறைவிடமா யிருக்கின்ற பாடலிபுரம் என்னும் ஒரு பட்டணமுண்டு. அந்தப் பட்டணத்திற் சகல சுகுணங்களோடுங் கூடிய சுதரிசனன் என்னும் அரசனொருவ னிருந்தான். அந்த அரசன் தன் பிள்ளைகள் கல்வியில் விருப்பமில்லாமல் மூடர்களா யிருந்ததைக் கண்டு, வெகு விசனத்தோடும் ஆலோசிக்கலானான் :

கல்வியுந் தாமகுணமு மில்லாத பிள்ளைகள் இருந்து ஆவதென்ன ? பால் கொடாத எருமைகளைக் காப்பாற்றிப் பலனுண்டா ? வேத சாஸ்திரம் அறிந்தவனாய் ஒரே பிள்ளை இருந்தாலும் அவனாலே குடும்ப மெல்லாஞ் சுகமடையும். இப்படிக்கில்லாத பிள்ளைகள் கர்ப்பத்திலே யழிந்தாலும், அழியாவிட்டாற் பிறந்தவுடனே இறந்தாலும் போவது நல்லது. குலத்தில் அயோக்கியனை பிள்ளை இருக்கலாகாது. ஜன்மாந்தர புண்ணியத்தினாலே இம்மை மறுமைக்குச் சுகங்கொடுக்கிற புத்திரன் பிறக்கிறான் ; பாபத்தினாற் குலத்தைக் கெடுக்கிற புத்திரன் பிறக்கிறான். மேலும், இந்தப் பிள்ளையைப் பெற்றவர்கள் என்னதவஞ் செய்தார்களோ என்று கண்டோர் சொல்லும்படி நடக்கிறவனல்லவோ பிள்ளை!"

இவ்வாறு தனக்குள்ளே ஆலோசித்துப் பெருமூச்சு விட்டு, பின்பு சபையைப் பார்த்து, "பருவமுஞ் செல்வமும் ராஜசமும் அறிவில்லாமையுமாகிய இந்த நான்கனுள் ஒன்றொன்றுதானே கேட்டுக் கெல்லாம் மிகுந்த துணையாயிருக்கும். இந்த நான்கும் ஒருவனிடத்தி லிருந்தால் அவன் என்ன பாடு படான்? பிள்ளை யெண்ணிக் கைக்குப் பிறந்து, துன்மார்க்கர்களா யிருக்கிற என் பிள்ளைகளுக்கு நீதி சாஸ்திரோபதேசத்தினால் எந்த மகா புருஷன் மறு சனனம் வரப்பண்ணுவான்?" என, அப்போது சகல நீதி சாஸ்திரங்களிலும் வல்லவனாகிய சோமசன்மா என்பவன் எழுந்து, "அறிவில் இவர்களுக்குச் சமானரானவர்கள் இவ்வுலகத்தி லில்லையென்று சொல்லும்படி இதோ நான் ஆறுமாசத்திற் செய்ய மாட்டுவேன். அது வரைக்கும் நீர் நாளை எண்ணிக் கொண்டிரும்" என்று சபதம் பண்ணினான். அதைக் கேட்டு, நடுக்கடலிலே திசைதப்பி மயங்கும் மாலுமிக்கு ஒரு துறை தோற்றினாற்போல, அரசன் மிகவும் மனமகிழ்ந்து அவனுக்கு உபசாரஞ்செய்து, தன்னுடைய பிள்ளைகளை அவன் வசத்தில் ஒப்பித்தான். சோமசன்மா உடனே அந்த ராஜகுமாரர்களைத் தன்வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போய், கருப்பஞ் சாற்றைக் காய்ச்சி ஒரு சர்க்கரைக் கட்டியாகத் திரட்டினாற்போல, நீதி சாஸ்திரங்களைப் பஞ்சதந்திரக் கதையாகக் கற்பித்து, அவர்களுக்குச் சொல்லத் தொடங்கினான். எப்படியென்றால்,

சோமசன்மா: "ஓ ராஜ குமாரர்களே, உங்களுக்கு வேடிக்கையாகச் சில கதைகள் சொல்லுகிறேன் கேளுங்கள்" என்று சொல்ல,

ராஜகுமாரர்கள் "அஃது என்ன கதை?" என்றார்கள்.

சோமசன்மா: "பஞ்சதந்திரக் கதை" என்று சொன்னான்.

ராஜகுமாரர்கள்: "பஞ்சதந்திரம் என்பதென்ன? தெரியச் சொல்லவேண்டும்" என்றார்கள்.

சோமசன்மா: "அவை மித்திரபேதம், சுகிர்ல்லாபம், சந்திவிக்கிரகம், அர்த்தநாசம் அல்லது லப்தஹானி, அசம்பிரேக்ஷிய காரித்துவம் என்னும் ஐந்துமாம். அவைகளுள், மித்திரபேதமாவது சிநேகத்தைக் கெடுத்துப் பகையுண்டாக்கல், சுகிர்ல்லாபமாவது தங்களுக்குச் சமானரானவர்களோடு கூடிப் பகையில்லாமல் வாழ்ந்திருத்தல். சந்திவிக்கிரகமாவது பகைவரையடுத்து உறவுசெய்து வெல்லுதல். அர்த்தநாசமாவது தன் கையிற் கிடைத்த பொருளை யழித்தல். அசம்பிரேக்ஷிய காரித்துவமாவது யாதொரு காரியத்தையுந் தேற விசாரியாமற் செய்தல்" என்று சொன்னான்.

ராஜகுமாரர்கள்: "ஐயா, அந்தக் கதைகளை எங்களுக்கு விளங்கச் சொல்லவேண்டும்" என்றார்கள்.

சோமசன்மா: "உங்களுக்கு மங்கள முண்டாகுக!" என்று ஆசீர்வதித்துச் சொல்லத் தொடங்கினான்

முதலாவது

# மித்திரபேதம்

ஒரு காட்டில் ஒரு சிங்கமும் எருதுங் கூடி மிக வும் ஒருமையாக வாழ்ந்திருந்தன. அந்தச் சிநேகத் தைக் கோட்சொல்லுதலும் உலோபகுணமு முள்ள ஒரு நரி வந்து கெடுத்தது" என்று சோமசன்மா சொல்ல, ராஜ குமாரர்கள், "அஃது எப்படி?" என, அவன் சொல்லு வான் :

"தென்னாட்டிலே மகிழாரூப்பிய மென்னும் பட்ட ணத்தில் வர்த்தமானன் என்றொரு வர்த்தகன் இருந் தான். அவனுக்கு வெகு பணமிருந்தும் இன்னுஞ் சம் பாதிக்க வேண்டுமென்னும் ஆசையினால் ஆலோசிக்க லானான் : 'யாதொன்று சம்பாதிப்பது அருமையோ அதைச் சம்பாதிக்கவேண்டும், சம்பாதித்ததைக் காப் பாற்றவேண்டும், காப்பாற்றினதை விருத்தி பண்ண வேண்டும், விருத்தி பண்ணினதைத் தானும் அனுப வித்து உத்தம பாத்திரத்திற் செலவழிக்க வேண்டும். ஏனென்றால், காப்பாற்றாத திரவியம் நாசமாகும்; விரு த்தி பண்ணாதது குறையும்; தானும் அனுபவித்துச் சற் பாத்திரத்திற் செலவழியாதது வீணாகு மெனச் சாஸ்திர மிருக்கிறது. மேலும், இன்பமும் புண்ணியமும் கீர்த்தி யும் மனிதர்க்குள்ளே பெருமையும் உறவும் நினைத்தது முடித்தலும் யாருக்குண்டு? திரளாகப் பணங் குவித்த

வர்களுக்கே யுண்டு; இல்லாதவர்கள் உலகத்திலே நடைப்பிண மாவார்கள். ஆகையினாலும் மேன்மேலுஞ் சம்பாதிப்பதே யோக்கியமாகும்.

இவ்விதமாக ஆலோசித்துக்கொண்டு, வர்த்தமானன் தன்னிடத்திலுள்ள சரக்குகளை வண்டியிலேற்றி, அதிற் சஞ்சீவகன் நந்தகனென்னும் பெயர்களையுடைய இரண்டு எருதுகளைப் பூட்டி நடத்திக்கொண்டு தேசாந்தரம் போனான். போகும்போது ஒருநாள் நெருங்கிய காட்டிலே மிகுந்த பாரத்தினாற் சஞ்சீவகனென்னும் எருது கால் இடறி விழுந்து நொண்டியாயிற்று. அப்போது வர்த்தமானன் அந்த எருதுக்குப் பதிலாக வேறோர் எருதை வண்டியிற்கட்டி யோட்டிக்கொண்டு, அவ்வெருதுக்கு ஓர் ஆளைக் காவல்வைத்துப் போனான். அந்தச் சேவகன் இரண்டொருநாட் கழித்து வர்த்தகனிடத்துப் போய், அந்த எருது செத்துப்போயிற்றென்று பொய் சொன்னான்.

காட்டில் விடப்பட்ட எருதோ, ஆயுர்ப் பலத்தினாற் பிழைத்துப் புல் முதலாகிய மேய்ச்சலாலே மிகவும் பெருத்துக் கொழுத்து ஒடிந்த காலுங் கூடி அந்தக் காட்டிலே எதேச்சையாகத் திரிந்துகொண் டிருந்தது. அப்படி யிருக்கையில், காட்டிற் சஞ்சரிக்கிற பிராணிகளுக்கெல்லாம் ராஜத்துவத்தை ராஜ்ய பட்டாபிஷேகச் சடங்குகளில்லாமலே தன் வல்லமையினால் அடைந்திருந்த பிங்களன் என்னும் சிங்கம் தன் பராக்கிரமத்தாற் சம்பாதிக்கப்பட்ட ராஜ்யத்தைச் சுகமாக அனுபவித்துக்கொண்டிருக்கையில் ஒருநாள் தாகமெடுத்துத் தண்ணீர் குடிக்க யமுனை யாற்றங்கரைக்குப் போயிற்று.

போகும்போது அங்கே சடிதியில் என்றைக்குங் கேட்டறியாத பேரிடி முழக்கமென்ன அந்த ரிஷபம் முக்காரம்போட்ட தொனியைக் கேட்டுத் திடுக்கிட்டு, இதேது புதிதாயிருக்கிற தென்று பயந்து நடுநடுங்கித் தண்ணீர் குடியாமற் சும்மா அசைவற நின்றுவிட்டது.

அப்போது அவ்விடத்திலிருந்த சிங்கத்தினுடைய பிரதான மந்திரி குமாரர்களாகிய கரடகன் தமனகனென்கிற நரிகள் இரண்டும் இந்த அதிசயத்தை யறிந்து ஒன்றுக்கொன்று பேசத் தொடங்கின. தமனகன் கரடகனைப் பார்த்து, 'நம்முடைய அரசன் தண்ணீர்க்குப் போய்க் குடியாமல் ஏன் சும்மா நிற்கிறான்?' என, கரடகன், 'அதை விசாரிக்கிறதினால் நமக்கு ஆவதென்ன? இரை யகப்படுமா? பெருமை யுண்டாகுமா? கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பமேன்? சும்மாவிரு; ஏனென்றால், தனக்குத் தகாத காரியத்தைச் செய்கிறவன் கடாவிய ஆப்பைப் பிடுங்கின குரங்கு பட்ட பாடு படுவான்' என்று சொல்ல, 'அஃது என்ன?' என்று தமனகன் கேட்க, கரடகன் சொல்லும் :

## கதை - 1

மகத தேசத்தி லிருக்கின்ற சுதத்தன் என்பானொருவன் கோயிற் றிருப்பணிக்காகக் கொண்டுவந்து அறுக்கவிட்ட மரங்களில், வாட்காரன் பிளக்கும்படி முளைகள் அடித்துவிட்டுப் போன ஒரு மரத்தின்மேல், அந்தக் கோயில் நந்தவனத்தி லிருந்த குரங்குகளில் ஒன்று வந்து உட்கார்ந்தது. அப்போது அது அம் மரப் பிளப்பில் தன் கால் நுழைந்திருப்பதை யறியாமல், அடித்த

முளையை அசைத்துப் பிடுங்கிற்று. உடனே பிளப்பு நெருங்க, காலை வெளியில் எடுக்க முடியாமல் தவித்து இறந்தது. ஆதலால், தனக்குத் தகாத காரியத்தைச் செய்தால் யார்க்கும் பிராணச்சேதம் வரும்' என்று சொல்லி, 'நேற்று நாம் தின்று மிகுந்திருக்கின்ற இரையைத் தின்று சுகமே யிருப்போம் வா' என்று அழைத்தது. இவ்வாறு கரடகன் அழைத்தலும்,

தமனகன்: கரடகனைப்பார்த்து, 'சுவாமி காரியஞ் செய்யாமல் இரை தேடுகிறதையே பெரிதாக நினைக்கலாமா? ஒருவன் மித்திரர்களுக்கு உபகாரமுஞ் சத்துருக்களுக்கு அபகாரமும் பண்ணவேண்டும். அதற்கு ராஜ சேவையே தக்கது. மேலும் அரசனை யடுத்திருக்கையில் வெகு ஜனங்களுக்கு நன்மை செய்வதே ராஜ சேவைக்குப் பிரயோசனமாம். நன்மை செய்வதற்கிடமில்லாவிடின் உயிர் பிழைத்திருந் தாவதென்ன? காக்கையும், காக பலியையும் எச்சிலையும் மலத்தையுந் தின்று ஆயிரம் வருஷம் பிழைத்திருக்கிறது. நாயும் பசையில்லாத வெள் ளெலும்பைக் கௌவிக் கடித்துப் பல்லசைந்தும் பசி தீராமற் சந்தோஷத்தை யடைகிறது. மேலும், அது எசமானன் கையிலிருக்கிற ஒரு கவளம் எச்சிலைப் பார்த்துக் காலில் விழுந்து வயிற்றை யெக்கிக் கொண்டு எளிய முகத்தைக் காட்டி அவன் முகத்தைப் பார்த்து வாலைக் குழைத்துக் கெஞ்சிக் காத்துக் கிடந்து கொஞ்சம் எச்சிலை வாங்கித் தின்னும். யானையோ, பாகனைப் பாராமலும் அடுக்காமலும் அவன் வேண்டி வேண்டி வலியக் கொடுக்கக் கர்வத்தோடு வாங்கி நாயைக் காட்டிலும் ஆயிரம் பங்கு அதிகம் சாப்பிடும். சிங்கம்

பசியினுற் சங்கடப்படும்போது, நரி சமீபத்தி லிருந் தாலும் அதை அசட்டை பண்ணி யானையையே கொல்லும். ஆதலால், உலகத்தில் யார் புகழோடு சீவிக் கிருர்களோ அவர்களே பாக்கியவான்கள். சிறு குழி கள் கொஞ்சந் தண்ணீரால் நிறையும் ; எலியின் சேரங்கை சில தானியத்தால் நிரம்பும். அது போல, மூடன் இதாகிதந் தெரியாமற் கொஞ்சத்திலே சீவனம் பண்ணுவான். ஆனல், அவனுக்கும் பசுவுக்கும் என்ன பேதம்? ஆகையால் ராஜ காரியம் பார்த்துப் பெருமை யுடனே சீவிக்கிறதே நல்லது' என்று இப்படிச் சொல்லக் கேட்டு

கரடகன் : தமனகனைப் பார்த்து, 'நல்லது, இந்த யோசனைகளுக்கும் இந்தப் பேச்சுகளுக்கும் இப்போது நாம் ராஜ காரியத்தி லிருக்கவில்லை, இரை தேடுகிற காரியத்தி லிருக்கிறோம், ஆதலால் நீ ஏன் வீணை மனோராச்சியம் பண்ணுகிறாய்? முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்டாற் கிட்டுமா?' என்று இகழ்ந்து சொல்ல,

தமனகன் : 'நல்லது இருக்கட்டும், பிரதானியும் காலத்திஞல் அப்பிரதானி யாகிறான். தன் முயற்சி யாலுங் குணத்தினலும் லகுவானவனுஞ் சமர்த்தனு கிறான். அல்லாமலும், யாரும் மேலான காரியத்தையே ஆலோசிக்க வேண்டும். அது கைகூடாவிட்டாலும் பெருமை வரும். புத்திசாலிகள் அருமையான காரியங் களைச் செய்வார்கள். புத்தியீனர்கள் எளிமையான காரியங்களைச் செய்வார்கள். மலையுச்சியில் ஒரு பெருங் கல்லை யேற்றுதல் அரிது ; அங்கிருந்து அதைத் தள்ளு

தல் எளிது. ஏரியில் நீரைக் கட்டுதல் அரிது; உடைத்தல் எளிது. ஆகையால், பெருமையுஞ் சிறுமையும் அவரவராலேயே வரும். முயற்சியுடையா ரிகழ்ச்சியடையார் என்னும் பழமொழியையாயினுங் கேட்டிலையா?' என்று இப்படிச் சொல்ல.

கரடகன்: தமனகனைப் பார்த்து, 'நல்லது, நீ போய்ச் சிங்கத்தினிடத்தில் எதைக் குறித்துப் பேசுவாய்?' என

தமனகன்: நம்முடைய சுவாமி மூடத்தனத்தாற் பயந்திருக்கிறான். அதை நீ எப்படி அறிந்தா யென்று கேட்கிறையோ, சொன்ன பொருளைப் பக்ஷி மிருகங்களும் அறிந்துகொள்ளும், சொல்லாமல் அறிகிறவனே பண்டிதன். அப்படி அறியாவிட்டாற் புத்தியாற் பிரயோசன மென்ன? ஆகையால் நான் இங்கே யிருந்தபடியே அறிந்தேன். இப்போது நான் இதை முன்னிட்டுக்கொண்டு போய்ச் சிங்கத்தைச் சிநேகம் பண்ணிக் கொள்ளுகிறேன்' என,

கரடகன்: தமனகனைப் பார்த்து நம்முடைய அரசர்கள் மோந்துகொள்வதுபோற் கடிக்கிறவர்கள். அரசரும், நெருப்பும், பாம்புஞ் சரி. ஆதலாற் பழக்க மில்லாமலிருக்கையில் அவனை எப்படிச் சிநேகம் பண்ணிக் கொள்வாய்?' என, அப்போது

தமனகன்: நான் பேசுவதிற் சதுரனென்று அறியாயா? சமர்த்தனுக்கு எது பெரிது? பறக்கிற பறவைகளுக்கு எது தூரம்? வித்துவானுக்கு எது பரதேசம்? பிரியமாகப் பேசுகிறவர்களுக்கு எவன் சத்துரு?' என,

கரடகன்: அப்படியானாலும் ராஜாக்களிடத்தில் அகாலத்திற் போனால் அவமானம் நேரிடும்' என்றது.

தமனகன்: அதைக்கேட்டு, 'அவமானம் வந்தாலும் எசமானன் சமீபத்திலேயே யிருக்கவேண்டும். ஏனென்றால், யார் சமீபத்தி லிருக்கிறானோ அவனுடனே அரசர்கள் காரியங்களைச் சொல்லுகிறார்கள். கொடிகள் கிட்டவிருக்கிற மரத்திலேயே படரும். அரசர்களும் ஸ்திரீகளுந் தங்களைக் காத்து இங்கிதம் பேசுகிறவர்களிடத்தில் மனதிரங்குவார்கள்' என

கரடகன்: 'நல்லது, நீ நம்முடைய அரசனிடத்தில் எப்படிப் பேசுவாய்?' என்றது.

தமனகன்: 'நல்ல மழை பெய்திருக்கையில் எப்படி விரையினின்று முளைகள் புறப்படுமோ அப்படி ராஜாவின் கேள்விக் கேற்க என் வாக்கினின்றும் உத்தரம் புறப்படும். ஆயினும், பிருகஸ்பதியும் ஒருவேளை பேச்சிலே தவறுவானானால் மற்றவர்களுக்குக் கேட்பானேன்? எப்படியுங் காலமறிந்து பேசினால் யாதோர் அவமானமும் வராது. அரசன் தன் காரியம் யாராலே ஆகிறதோ அவனிடத்தில் ஒருவேளை சிறிது குற்றம் நேரிட்டாலும் அதைப் பாராட்டாமல் அவனைப் பரிபாலித்து விருத்தியடையப் பண்ணுவான்' என,

கரடகன்: 'அரசர்கள் மலைபோல் அனுசரிக்கிறதற்குக் கடினமா யிருக்கிறார்கள்' என,

தமனகன்: 'ஆயினும் அவரவர்கள் சுபாவ மறிந்து பேசித் தனக்கு இதம் பண்ணிக்கொள்ள வேண்டும்' என்று சொல்லிக் கரடகனிடத்திற் செலவு பெற்றுக்

கொண்டு, சிங்கத்தினிடத்திற்குப் போயிற்று. போய்த் தூரத்திலே நின்று தண்டம் பண்ணி, அரசன் உத்தர வளிக்க, உட்காந்தது. உட்காந்த வுடனே,

சிங்கம் : 'நெடுநாளாக உன்னைக் காணோம்' என,

தமனகன் : 'இப்போது தேவரீரிடத்திற்கு வரத் தக்க காரியம் நேரிட்டதனாலே தங்களுடைய திருவடி யண்டை வாலானேன். இல்லாவிட்டால் வந்ததற்குப் பிரயோசன மென்ன? ராஜாக்களுக்கு ஒருவராலும் பலனில்லாவிட்டாலும் ஒருவேளை சிறு துரும்பும் பல்லுக் குத்த உதவும்; மற்றவைகளுக்குக் கேட்பானேன்? மேலும், ஒருவேளை அரசர்கள் குணவானை அசட்டை பண்ணித் தள்ளிவிட்டாலும் அவன் சற்குணம் போய் விடுமா? நெருப்பைத் தலைகீழாகப் பிடித்தாலும் அதன் சுவாலை கீழாகுமா? ஆதலால், அரசர்கள் பரிசோதித் தறிந்து யோக்கியனை நல்லகாரியத்தில் வைத்தால் அவன் அவர்களுக்குக் கீர்த்தியைப் பெருகப் பண்ணுவான். ஆகையால் என்னைத் தாங்கள் சிறு நரி யென்று அவமா னம் பண்ணலாகாது. விஷ்ணு எடுத்த வராக வடிவை உலகத்திற் பூசிக்கவில்லையா? ரூபத்தைப் பாராமற் குணத்தைப் பார்க்கவேண்டும். ஏனென்றால், மலைபோ லிருக்கிற தேர் சிறு சுள்ளாணியால் நிலைபெறும். நானோ சுவாமி காரியத்திற் பற்றுள்ளவன்; கருவியுங் காலமும் அறிந்து கருமம் முடிக்கும் ஆற்றலுள்ளவன். இந்த வல்லமை யெல்லாம் உமது சார்பிருந்தாற் பிரகாசிக்கும். ஏனென்றால், வாள் முதலிய ஆயுதங்களும், வீணை முத லிய வாத்தியங்களும், பூமியும், ஸ்திரீகளும், யோக்கியர் களும், சாஸ்திரங்களுமாகிய இவையெல்லாம் பரிபால

னம் பண்ணுகிறவர்களாற் பிரகாசிக்கும். அண்டையிற் சமர்த்தனில்லாத அரசனுக்கு அபகீர்த்தி வரும்' என்று இப்படிச் சொல்லக் கேட்டு,

சிங்கம்: 'தமனகா! நீ என் பிரதானி புத்திர னல்லவா?' என,

தமனகன்: 'சுவாமி ன்று வணங்கிச் சும்மா விருந்தது.

சிங்கம்: 'ஏதாவது சொல்ல வேண்டுவதிருந்தாற் சொல்' என,

தமனகன்: 'தேவரீர் தண்ணீர்க்கு வந்து குடியா மல் மெய்ம்மறந்து சும்மா நிற்கிறீரே! என

சிங்கம்: 'மெய்தான், நான் இந்தக் காட்டில் வெகுநாள் சுகமாக இருந்தேன். இப்போது இதை விட்டுவிடத் தக்கதாகச் சம்பவித்திருக்கிறது. ஏனென் பாயாகில், என்றைக்குங் கேளாத மேக முழக்கம் போலொரு தொனி இன்றைக்குக் கேட்டேன். அந்த முழக்கம்போலவே யிருக்குமல்லவோ அந்தப் பிராணி யும்? ஆதலால், இதைக் குறித்து நீ என்ன சொல்லு கிறையோ அதுவே எனக்குப் பிரமாணம். இப்போது நீ வழுக்கி விழுகையில் ஊன்றுகோல்போற் கிடைத் தாயே' என,

தமனகன்: 'சுவாமி, தொனியைக் கேட்டுப் பயப் படலாகாது. முன் ஒருவன் ஒரு தொனியைக் கேட்டுப் பயந்து, பிறகு நெருங்கிப் பார்த்தவுடனே அங்கே தோலும் கோலு மிருக்கக் கண்டான் என

சிங்கம்: அஃது என்ன? என்று கேட்க, தமனகன் சொல்லும்:

## கதை - 2

ஒரு நரி பசியால் வருந்தி இரைக்காகத் திரிந்து திரிந்து ஒரு போர்க்களத்தில் வரும்போது, அங்கே அசதியிலுண்டான ஒரு பெரிய தொனியைக்கேட்டு மிகவும் பயந்து நான் செத்தேனென்று திடுக்கிட்டது. பிறகு சற்று முன்னே போனவுடன் அங்கொரு பெரிய பேரிகையைப் பார்த்து, அடுத்திருக்கிற மரத்தின் கிளை காற்றில் அசைந்து அதிலடிக்கத் தொனியுண்டாயிற்றென்று அறிந்துகொண்டு அதனருகே போய்ப் பார்த்து, அங்கே பேரிகையின் தோலுங் கோலுமே யல்லாமல் வேறொன்றும் இல்லையெனத் தெளிந்து சந்தோஷ மடைந்தது. ஆதலால், சத்தத்தினாலே மாத்திரம் பயப்படலாகாது. தாங்கள் கட்டளை கொடுத்தால் இந்தச் சத்தத்தின் மூலத்தை யறிந்து வருவேன்' என, சிங்கம் அப்படியே செலவு கொடுத்தது. பிறகு தமனகன் சஞ்சீவகனென்னும் எருதினிடத்திற் போய்ப் பேசி அதைச் சிநேகம் பண்ணிக்கொண்டு, சிங்கத்தண்டை வந்து தண்டம் பண்ணி முன்னே நின்றது.

சிங்கம: 'நீ, அந்தப் பிராணியை இன்னதென்று அறிந்து வந்தாயா?' என,

தமனகன்: 'தங்கள் கட்டளைப்படியே போய்ப் பார்த்தேன். முன் தாங்கள் எப்படி நினைத்தீர்களோ அப்படியே புஷ்டியா யிருக்கிறான். அவன் தங்கள்

நட்பை விரும்புகிறான். கட்டளையானால் திரும்பிப் போய்த் தரிசனத்துக்கு இட்டுக்கொண்டு வருவேன்' என,

சிங்கம் : நல்லது, அப்படியே ஆகட்டும்' என்றது.

தமனகன் மறுபடி எருதண்டை போய் அதனை உபசாரத்தோடு அழைத்து வந்து ராஜாவைத் தரிசனம் பண்ணுவித்தது. பிறகு பிங்களனுக்குஞ் சஞ்சீவகனுக்கும் வெகு சிநேகமுண்டாய் ராஜாவுக்கு மற்று யாரும் அகத்தியமில்லாமல் இப்படி வெகுகாலங் கழிந்தது. அப்போது பிரதானி புத்திரர்களாகிய கரடக தமனக ரென்னும் இரண்டு நரிகளுக்கும் இரை யொன்றும் அகப்படாமையால் அவை ஆலோசிக்கத் தொடங்கின

தமனகன் : 'நாம் காட்டிலே தனித்திருந்த சிங்கத்துடனே எருதைச் சிநேகம் பண்ணுவித்தது, யானை தன் மத்தகத்தைக் கொத்துகிறதற்கு அங்குசத்தைத் தானே யெடுத்துப் பாகன் கையிற் கொடுப்பது போலாயிற்று ; மேலும் முன்னாள் ஆட்டுக்கடாச் சண்டையில் நரி செத்ததும், ஆஷாடபூதியின் கூட்டுறவாற் சந்நியாசி பொருளிழந்ததும் எப்படி அவரவர்கள் குற்றத்தினாலேயே சம்பவித்தனவோ, அப்படியே நம்முடைய தோஷத்தினாலேயே நமக்கு இரை கிட்டாமற் போயிற்று என,

கரடகன் : 'அஃது எப்படி? சொல்' என, தமனகன் சொல்லும் :

## கதை - 3

ஒரு தேசத்தில் தேவசன்மா என்னும் ஒரு சந்நியாசி தான் பிச்சையெடுத்துச் சம்பாதித்த திரவியத்தைக் கந்தைக்குள் வைத்து யார்க்குந் தெரியாமல் தைத்துப் போர்த்துக்கொண்டு பின்னும் பிச்சை யெடுத்துச் சாப்பிட்டுக்கொண்டு திரிய, அந்தச் சூதை யறிந்த ஆஷாடபூதி யென்னும் ஒரு திருட்டுப் பிராமணன் இந்தக் கந்தையை மாத்திரம் எப்படியாயினுந் திருடிக்கொண்டால் நாம் எப்போதும் திருட்டு வேலை செய்ய வேண்டுவதில்லை, நம்முடைய சீவனம் குறைவின்றி நடக்கும் என்று ஆலோசித்து, ஒரு பிரமசாரியைப்போல் அந்தச் சந்நியாசியினிடத்திற்போய் அவன் காலில் வீழ்ந்து, "அடியேனுக்கு ஞானோபதேசஞ் செய்து இந்த நிசாரமாகிய சமுசார சாகரத்தில் நான் இன்னும் அலையாமல் சிறிது கடைக்கண்ணாற் பார்த்து என்னைக் கடைத்தேறப் பண்ணும்; ஓ மகானுபாவா! ஓ பரதுக்கஞ் சகியாத பரமபுருஷா!" என்று இப்படி அழுத கண்ணுஞ் சிந்திய மூக்குமாகக் கலங்கி நிற்க, அதைப் பாசாங்கென்று அறியாத அந்தச் சந்நியாசி, இவன் தலைமேற் கையை வைத்துப் "பயப்படாதே" என்றான். அது முதலாக ஆஷாடபூதி வெகு பயபக்தியுடனே அவன் காலா லிட்ட வேலையைக் கையாற் செய்துகொண்டு, கந்தைக்குச் சமயம் பார்த்துக்கொண்டிருக்கும் நாளில் ஒருநாள், ஒரு பிராமணன் வீட்டில் இருவரும் விலாப்புறம் வீங்கப் பிச்சை பண்ணிக்கொண்டு வெகுதூரம் வந்தபிறகு, ஆஷாடபூதி சந்நியாசி அறியாமல் ஒரு துரும்பை யெடுத்துத் தன் தலைமேலே வைத்துக்கொண்டு அந்தத் துரும்பை அவ

னுக்கு எடுத்துக்காட்டி, "ஐயையோ! நமக்குப் பிச்சை கொடுத்த பிராமணன் வீட்டுத் துரும்பு என் தலையில் ஒட்டி வந்துவிட்டதே, அன்னமிட்ட வீட்டிற் கன்ன மிடலாமா? உப்பிட்டவரை உள்ளளவும் நினை என்று பழமொழியும் இருக்கிறதன்றோ?" என வாய் பதற நடு நடுங்கி, "இதை அந்த அன்னதாதா வீட்டிற் போட்டு விட்டு இதோ நொடியளவில் வருவேன்" என்று குருக் கள் பார்க்கும்படி பரபரப்பாகச் சிறிது தூரங் காலடி யிட்டத்திற் படும்படி ஓடி ஒரு செடி மறைவில் உட் கார்ந்திருந்துவிட்டு, பின்பு இரைக்க இரைக்க ஓடி வந்து ஆசாரியன் காலில் விழுந்து எழுந்து, "சுவாமி, உம்முடைய அநுக்கிரகத்தினால் இந்தப் பாவத்திற் குத் தப்பினேன்" என்றான். இதைப் பார்த்து அந்த ஏழைச் சந்நியாசி ஆச்சரியப்பட்டு, இவன் பர சொத்துக்கு ஆசைப்படாத பரமாத்மா வென்று நம்பி, தன் உயிர்க்குச் சமானமாக நினைத்திருந்த கந்தையைச் சீஷன் கையிற் கொடுத்து ஒரு குளக்கரையி லிருக்கச் சொல்லித் தான் சலபாதைக்குப் போய்க் காலலம்பப் போன விடத்தில், இரண்டு ஆட்டுக் கடாக்கள் ஒன்றோ டொன்று முட்டிச் சண்டைசெய்ய, அவைகளின் மண் டையிலிருந் தொழுகுகிற உதிரத்தை உண்ணலாமென்று ஒரு நரி போய் இரண்டுக்கும் நடுவில் அகப்பட்டு இறந் தது; அந்த அனர்த்தத்தைப் பார்த்துக்கொண்டு சிறிது நேர மிருந்தான். அப்போது அந்தச் சீஷன் இதுதான் நல்ல சமயம், இதை விட்டால் இனிக் கிட்டுமா, காற் றுள்ளபோதே தூற்றிக்கொள்ள வேண்டு மென்று நினைத்துக் கந்தையைச் சுருட்டிக்கொண்டு ஓடிப் போனான். உடனே சந்நியாசி வந்து பார்த்துச் சீஷ

ளைக் காணுமல், ஓகோ! நம்மை ஆஷாடபூதி ஏய்த்தானே, இதோ மோசம் போனேமே யென்று திகிற்பட்டு, உப்புக்கண்டம் பறிகொடுத்த பார்ப்பாத்தியைப் போல் ஒருவருடனுஞ் சொல்லாம லிருந்துவிட்டான் என, இதைக் கேட்டுக் கரடகன், 'இதற்கு நான் செய்யத் தக்கதென்ன?' என்று கேட்க,

தமனகன்: 'யாதொன்று போயிற்ருே அதை மறுபடி சேகரிக்கவேண்டும், எது சம்பாதிக்கவில்லேயோ அதைச் சம்பாதிக்கவேண்டும், எதிராக வருகிற விக்கினங்களைத் தடுக்கவேண்டும் என்று இப்படி ஆலோசித்துப் பண்ணுகிறவ னல்லவோ மந்திரி. இப்போது நமக்குப் பிங்கள சஞ்சீவகர்களுடைய சிநேகத்தால் எல்லாச் சங்கடமும் நேரிட்டது. இவர்களுடைய நட்பைப் பிரித்தாற்ருன் நமக்கு இவ்வளவு அன்னங் கிடைக்கும்' என்று சொல்ல,

கரடகன்: 'அந்தப் பிங்கள சஞ்சீவகர்கள் உறவைக் கெடுக்க யாரா லாகும்? மணியினின்றும் ஒளி பிரிக்கப் படுமோ? இது முடியாத காரிய மல்லவோ?' என,

தமனகன்: 'என்ன சொல்லுகிருய்! உபாயத்தா லாகிறது பராக்கிரமத்தா லாகுமோ? ஒரு காகம் சொர்ணமாலேயால் ஒரு கிருஷ்ண சர்ப்பத்தைக் கொன்றது அறியாயோ?' என,

கரடகன்: அஃது எப்படி?' என்று ஆவலோடு கேட்க, தமனகன் சொல்லும்:

## கதை - 4

'ஒரு பெரிய மரத்திற் கூடு கட்டிக்கொண்டு ஆணும் பெண்ணுமாகிய இரண்டு காக்கைகள் நெடுநாளாக வாழ்ந் திருக்கும்போது, அம் மரப்பொந்தில் ஒரு நாகம் வந்து சேர்ந்து பெண் காக்கை இடுகிற முட்டைகளை யெல்லாங் குடிக்கக் கண்டு, ஆண் காக்கை இதற்கு என்ன செய்யலா மென்று மிகவும் வியசனப்பட்டுத் தனக்குச் சினேக மாகிய நரியிடத்திற் போய் நடந்த சங்கதிகளைச் சொல்லி, "இப்போதாகிலும் முட்டைகளைக் காப்பாற்று கிறதற்கு என்ன செய்யலாம்?" என, நரி "ஒரு நண்டு பல நண் டாசையைக் காட்டிக் கொக்கைக் கொன் றாற்போல் அந்நாகத்தை ஓர் உபாயத்தாற் கொல்ல வேண்டும்" என, காகம் "நண்டு கொக்கை எப்படிக் கொன்றது? சொல்லும் ஐயா" என நரி சொல்லும்:

## கதை - 5

"மீன்களையே மிகுதியுந் தின்று வளர்ந்த ஒரு கிழக் கொக்கானது குளக்கரையில்வந்து விசனமாய் உட்காந்திருந்தது; அப்போது அதிலிருந்த மீன்கள் கொக்கைப் பார்த்து, 'நீ உன் ஆகாரத்தைவிட்டுச் சும்மா உட்காந் திருப்பானேன்? சொல்' என, கொக்கு 'நான் மீன் தின்பது மெய்தான், ஆயினும் இன் றைக்கு இங்கே செம்படவன் வந்து எல்லா மீன்களையும் பிடிக்க இருக்கிறான், இதனால் என்னுடைய இரைக ளெல்லாம் நிர்மூலமாய்ப் போகுமே யென்று ஏங்கிச் சும்மா இருக்கிறேன்' என, இதைக் கேட்டு மீன்களெல் லாம் கூட்டங்கூடி எவன் நமக்கு அபாயஞ் சொன்னானோ அவனே உபாயஞ் சொல்லுவான் என்று ஆலோசித்துப்

பிறகு கொக்கைப் பார்த்து, 'நீயே எங்களை இப்போது இரட்சி' என, கொக்கு 'நான் செம்படவனோடு சண்டை பண்ணச் சமர்த்த னல்லேன்; மேலும் நான் கிழவன்; உங்களை வேறோ ரிடத்திற்குக் கொண்டுபோவேன்; அதனால் எனக்கும் இந்தத் தள்ளாமையான காலத்தில் பரோபகாரி யென்கிற பெயரும் வரும்; நீங்களும் வெகுகாலம் பிழைத்திருப்பீர்கள்' என, அப்போது அந்தப் பேதைமையான மீன்களெல்லாம் பிராணனைக் காப்பாற்றும் பொருட்டு அதன் பேச்சை நம்பி, 'நல்லது, அப்படியே கொண்டுபோக வேண்டும்' எனக் கெஞ்ச, அந்த வஞ்சனையுள்ள கொக்கு நடைக்கு ஒவ் வொன்றாகக் குளத்தி லிருந்த மீன்களை யெல்லாம் மூக்கி னாற் கௌவிக்கொண்டு போய்ச் சில மீன்களைத் தின்று, மற்றவைகளை ஒரு பெரிய பாறையின்மேல் உலர வைத்தது. பிறகு அந்தக் குளத்தி லிருந்த ஒரு நண்டு இந்தக் கொக்கைப் பார்த்து, 'ஓ சீவகாருணியனே! என்னையும் அவ்விடத்திற்குக் கொண்டுபோகவேண்டும்' என வேண்டிக்கொள்ள, கொக்கு வருங்காலத்தில் எதுவும் வலிய வருமென்று உள்ளுக்குள்ளே சந்தோஷித்து அப் படியே நண்டையும் கௌவிக்கொண்டு போகும்போது, நண்டு வழியில் மீன்கள் செத்துக்கிடப்பதையும் மீன் முட்கள் சிந்திக் கிடப்பதையும் மீன்கள் பாறையின் மேல் உலருவதையும் பார்த்து, ஐயோ! இக் கொக்கு பல மீன்களையுங் கொன்று நம்மையுங் கொல்ல வந்தது; நம் மைக் கொல்வதற்கு முன்னமே நாம் இதனைக் கொல்வோ மென்று ஓர் உபாயம் நினைத்துக் கொக்கைப் பார்த்து, 'நீ என்னை வருத்தப்பட்டு எடுத்துக்கொண்டு வந்தாய், அங்கே என்னுடைய பரிவாரங்கள் இருக்கின்றன, ஆகை

யால் அங்கேயே என்னை நீ மறுபடியுங் கொண்டுபோனால் அவைகளையும் காண்பிப்பேன்' என, அதைக் கேட்டுக் கொக்கு பேராசைப்பட்டுத் திரும்பி அந்தக் குளத்திற்கு நேரே வருகையில், நண்டு கொடுக்கினால் அந்தக் கொக்கின் கழுத்தை இரண்டு துண்டாக நறுக்கிக் குளத்தில் வீழ்ந்து சுகமாய் வாழ்ந்தது. ஆகையால் அந்தக் கொக்கைக் கொன்றது போலப் பாம்பையுங் கொல்லவேண்டும்" என, காகம் "அப்படிப் பாம்பைக் கொல்ல நான் செய்யவேண்டிய உபாயமென்ன?" என்று கேட்க, நரி "இப் பட்டணத்து ராஜகுமாரி குளிக்கிற மஞ்சனச் சாலைக்குப் போ; அவள் ஸ்நாநம் பண்ணும்போது ஆபரணங்கள் கழற்றி வைத்திருக்கும்; அந்த ஆபரணங்களில் ஒன்றை யெடுத்துச் சனங்கள் பார்க்கும்படி கொண்டுவந்து அந்த மரப்பொந்திற் போடு" என்று சொல்ல, காக்கையும் அப்படியே செய்ய, அந்த ராஜனுடைய வேலைக்காரர்போய் அந்த மரத்தின் பொந்தைப் பிளக்க, நாகம் சீறிவந்தது; வரவே, அதை இரண்டு துண்டாக நறுக்கி யெறிந்தார்கள். அதனாற் காகத்தின் காரியம் நிறைவேறிற்று. ஆதலால், உபாயத்தால் எல்லாம் கைவசப்படும். எவன் புத்திமானோ அவன் பலவான். எவனுக்குப் புத்தி யில்லையோ அவனுக்குப் பலமெங்கே? பூர்வம் புத்திபலத்தினால் ஒரு முயல் சிங்கத்தைக் கொன்றது' என, 'அஃது எப்படி?' என்று கரடகன் கேட்க, தமனகன் சொல்லும்:

## கதை - 6

ஒரு நெருங்கிய காட்டில் மதோன்மத்தன் என்னுஞ் சிங்கம் அந்தக் காட்டிலிருந்த மிருகங்களை வரை

யறையின்றிக் கொன்று தின்று கொழுத்து வெறிகொண்டு திரியும் நாளில், மிருகங்களெல்லாம் ஒன்றாகத் திரண்டு போய், "ஓ மிருகேந்திரா! உம்முடைய காட்டிலிருக்கிற மிருகங்களை யெல்லாம் நீர் இப்படிக் கொன்றால் மிருகங்கள் நிர்மூலமாய்ப் போம். ஆதலால் தினம் ஒவ்வொன்று உமக்கு இரை கொடுத்துக்கொண்டு வருகிறோம், அதை நீர் பக்ஷித்துக்கொண் டிருக்கலாம்" என்று பிரார்த்திக்க, சிங்கம் நியாயந்தான் என்று ஒப்பி, "அப்படியே செய்கிறேன்" என்று சத்தியஞ் செய்து கொடுத்தது. பின்பு ஒவ்வொன்றாகத் தின்றுகொண்டு வரும் நாளில், ஒருநாள் ஒரு கிழ முயலினுடைய முறை வந்தது. அப்போது விலங்குகள் எல்லாங் கூடி "இன்றைக்கு உன் முறை போ" என்று சொல்ல, முயல் இன்றைக்கு நமக்கு மரணம் வந்தபடியால் இதற்கு ஓர் உபாயம் யோசிக்கவேண்டும், புத்திமானுக்கு எதுதான் கை கூடாது? ஆகையால் இப்போது நாம் உபாயத்தாற் சிங்கத்தைக் கொல்வோம் என்று ஆலோசித்து, மெள்ள மெள்ள அந்தச் சிங்கத்தின் பசிவேளை தப்பி வர, சிங்கம் பார்த்து, "முயலே! யானையானாலும் என்னுடைய பசிவேளை தப்பி வருகிறதில்லையே, நீ எவ்வளவு பிராணி! இப்படித் தாமசமாய் வரலாமா?" என்று மிகுந்த கோபத்தோடு கையைத் தரையிலே மோதிக் கேட்க, முயல் "ஐயனே! இஃது என் குற்றமன்று; உன்னுடைய பசிவேளைக்கே வர இருந்தேன்; வருகிற வழியில் ஒரு பொல்லாத சிங்கத்தைக் கண்டு பயந்து ஒளித்திருந்து அந்தச் சிங்கம் போனபின்பு வந்தேன்" என்று சொல்ல, சிங்கம் "என்னை யல்லாமல் இந்தக் காட்டில் வேறே சிங்கம் நீ பார்த்தாயா? காட்டுவா" என்று அழை

க்க, முயல் அழைத்துக்கொண்டுபோய்ச் சேறும் நீரும் மிகுந்த ஒரு பாழ்ங் கிணற்றைக் காட்டி "இதிலே இருக்கிறது" என்று சொல்ல, சிங்கம் முயலின் பேச்சை நம்பிக் கிணற்றை யெட்டிப் பார்த்து, அதிலே தோன்றின தன் நிழலைக்கண்டு அந்தச் சிங்கம் இங்கே யிருக்கிறதென்று நினைத்து, மிகுந்த கோபத்தோடு அதைக்கொல்ல வேண்டுமென்று அதிற் பாய்ந்து சேற்றில் அழுந்தி இறந்தது. ஆகையால் எவன் புத்திமானோ அவன் பலவானென்று உனக்குச் சொன்னேன்' என, கரடகன் 'சிங்கத்தினிடத்திற்குச் சுகமாய்ப் போ, உனக்கு மங்களம் உண்டாகட்டும் என்றது.

பிறகு தமனகன் அந்தச் சிங்கம் தனித்திருக்கின்ற சமயம் பார்த்துப் போய்த் தண்டம்பண்ணி, 'சுவாமி! உமக்கு இன்றைக்கு ஒரு பொல்லாங்கு நேரிட்டது. அதை நான் அறிந்து கட்டளையில்லாமல் விண்ணப்பம் பண்ணிக் கொள்ளலானேன்' என, சிங்கம் 'அஃது என்ன? சொல்' என, தமனகன் 'உம்முடைய மித்திரனாகிய சஞ்சீவகன் உம்மிடத்தில் விசுவாசங் காண்பித்து உம்முடைய ராஜ்யத்தைப் பிடுங்கிக் கொள்ளுகிறதற்கு இச்சித்திருக்கிறான். இதை நீர் பொய்யென்று நினைத்துக் கோபித்தாலும் அல்லது தண்டித்தாலும் சரி, ராஜனுக்கு ஒரு துன்பம் வரும்போது தம் நலத்தைப் பாராமல் ராஜனுக்கு நல்ல உபாயங்களைப் போதித்துச் செய்யத்தக்க காரியங்களைச் செய்வித்தல் மந்திரிகளுக்கு நீதித்தொழி லாகையால் உமக்கு இதைத் தெரிவித்தேன்' என, பிங்களன் இதைக்கேட்டு ஆச்சரியப்பட்டுச் சும்மா இருந்தது.

தமனகன் : பின்னும், 'நீர் அவனை முக்கிய பிரதானி யாக்கினீர் அப்படியே யிருக்கட்டும், எனக்கென்ன? ஆனால், ராஜாவும் பிரதானியுஞ் சமானராயிருந்தால், ராஜ லக்ஷ்மி இருவரில் ஒருவனைக் கைவிடுவாள். மேலும் எப் போது ராஜா ஒருவனையே பிரதானி யாக்குகிறானோ அப் போது அந்தப் பிரதானிக்குக் கர்வம் உண்டாகிறது. ஆகையால், அவன் சுதந்தரனாய் ராஜ்ய ஆசையால் ராஜா வைக் கொல்ல இச்சிக்கிறான். ஆதலால் இப்படிப்பட்ட மந்திரியை வேரோடு களையவேண்டும். இல்லாவிட்டால் அவனால் தீங்கு நேரிடும். இது தங்கட்குச் சொல்ல வேண்டுமா? தாங்கள் எல்லாம் அறிந்திருக்கிறீர்கள். லோகத்திற் செல்வத்தை விரும்பாதவன் அருமை என்று இப்படியெல்லாம் சொல்லக்கேட்டு,

சிங்கம் : நகைத்து, 'சஞ்சீவக னிடத்தில் எனக் கிருக்கிற சிநேகம் போகாது ; ஏனென்றால், மித்திரர்கள் என்ன அநியாயம் பண்ணினாலும் அதைப் பிரியமாகவே நினைக்கவேண்டும்' என,

தமனகன் : இதுதான் புத்திக்குத் தோஷம்; இத னால் உமக்கு அபாயம் வரும் ; ஏனென்றால், எவனொரு வன் சாதுக்கள் புத்தியைக் கேளாமல் துஷ்டர் புத்தி யைக் கேட்கிறானோ அவன் மருந்து தின்னாத ரோகி யைப்போல விபத்தை யடைவான். காதுக்கு இனிமை யாயும் இதம் பண்ணுகிறதாயு மிருக்கிற வசனம் துர்லபம். காதகனுடைய வசனம் செவிக்கு இனிமையா யிருக்கு மாயினும் அதைக் கேட்கலாகாது' என,

சிங்கம் : 'நான் அபயங் கொடுத்து இரட்சித்தவன் எனக்குத் துரோகம் பண்ணுவானா! என்ன பேச்சுப் பேசுகிறாய்! போ' என

தமனகன் : மறுபடியும், ‘ துஷ்டர்குணம் மாறுமா ? நாயின் வாலைக் குணக்கெடுக்கலாமா ? எட்டி மரத்துக்கு அமுதம் வார்த்து வளர்த்தாலும் அதற்குத் தித்திப்பு உண்டாகுமா ? தாங்கள் கேளாமலிருக்க இந்த விருத் தாந்தத்தைச் சொன்னேன். ஏனெனில், பிறர்க்கு இதம் பண்ணுவது சாதுவுக்கு முக்கிய தருமம். இனி மேல் என்மேற் குற்றமில்லை. ஒருவேளை ராஜா பாமரர் களுடைய புத்தியைக் கேட்டுச் சங்கடப்படும்போது காரியகாரர்மேற் குற்றஞ் சுமத்துகிறுறதலால் நான் சொன்னேன் ’ என்று இப்படிச்சொல்லிச் சும்மாவிருந் தது. அப்போது,

சிங்கம் : இதை நான் சஞ்சீவகனுக்குச் சொல்ல வேண்டும் என.

தமனகன்: அவனுக்கு இதைச் சொன்னுல் அவன் சாக்கிரதைப்பட்டு வேறோர் உபாயத்தினுற் பொல் லாங்கு தேடுவான். ஆகையால் இதை அவனுடன் சொல்லாதிருப்பதே யோக்கியம். ராஜாவின் மந்திரா லோசனை இரகசியமாகவே யிருக்கவேண்டும் ’ என,

சிங்கம் : இதைக்கேட்டு மறுபடியும், ‘ அந்தச் சஞ் சீவகன் விரோதப்பட்டு என்ன செய்யமாட்டுவான் ? அவன் சாமர்த்தியம் எவ்வளவு ? ’ என்று சொல்ல,

நரி : நாம் அவனை அறியமாட்டோம், அவன் பராக்கிரமமுஞ் சுபாவமும் நமக்கு எப்படித் தெரியும் ? ஒருவன் குணத்தை யறியாமல் அவனைச் சேர்க்கலாகாது. சேர்த்தால் ஒரு சிலைப்பேன் மூட்டுப் பூச்சியைச் சேர் த்து நாசமடைந்தாற்போல் ஆகும் ’ என

சிங்கம்: அஃது எப்படி? சொல் என, தமனகன் சொல்லும்:

## கதை - 7

ஒரு ராஜாவின பஞ்சணையில் மந்தவிசர்ப்பிணியென்னும் ஒரு சீலைப்பேன் நெடுநாளாக வாசம்பண்ணிக்கொண்டிருக்கையில் ஒருநாள் இதன் வீட்டுக்கு டிண்டிபன். என்னும் மூட்டுப்பூச்சி வந்தது. அதைப் பார்த்துச் சீலைப்பேன், "அப்பா, நீ பொல்லாதவன்; முட்களைப்போன்ற பற்களினாலே தூங்குதற்கு முன்னமே துடுக்காய்க் கடிப்பாய்; நீ சமயம் தெரியாதவனாதலால் ராஜசயனத்தில் இருக்கத் தக்கவனல்ல, இவ்விடம் விட்டு ஓடிப்போ" என்று கடுகடுத்துச் சொல்ல, மூடு "நான் அப்படிச் செய்யவில்லை; நீர் சொன்னபடியே கேட்பேன்" என்று காலில் விழுந்து பிரார்த்திக்க, சீலைப்பேன் மனதிரங்கி, "நல்லது, நீ வெடுக்கென்று கடியாமல் நித்திரை செய்யப் பார்த்து மெத்தெனக் கடித்துக் கொஞ்ச ரத்தங் குடித்திரு" என்று சொல்ல, அப்போது அந்த மூட்டுப் பூச்சி நல்லது என்றிருந்து பிறகு ராஜா விழித்திருக்கும் போதே சுறுக்கென்று கடிக்க, ராஜன் திடுக்கென்று எழுந்திருந்து என்னவோ கடித்தது என்று சோதனைக்காரருடனே சொல்ல, அவர்கள் விளக்கைக்கொண்டு சோதிக்க, மூடு சீக்கிரமாய்க் கட்டிற்சந்தில் ஒளித்துக் கொண்டது. அதற்கு இடங்கொடுத்த சீலைப்பேன் அகப்பட்டது. அவர்கள் அதனை "நீயல்லவா எங்கள் ராஜனைக் கடித்தாய்?" என்று நசுக்கிக் கொன்றார்கள். ஐயோ! வகைதெரியாமல் இறந்தது. ஆகையால் ஒருவன் குணத்தைத் தெரிகிறதற்கு முன்னே அவனுடன் சகவாசம் பண்ணலாகாது' என.

சிங்கம் : அதைக் கேட்டு, 'அந்தச் சஞ்சீவக னுடைய துஷ்ட சுபாவம் இன்னபடி யென்று எனக்குத் தெரிந்தால் அப்போது நிசம்' என்று சொல்ல,

தமனகன் : 'அந்த எருது உம்மைக் கொல்ல நினைத்துத் தன் கொம்புகளை முன்னிட்டுக்கொண்டு உம் முடைய சந்நிதியில் வரும்போது உமக்குத் தெரியவரும்' என்று சொல்லிவிட்டு எருதினிடத்திற்குப்போய் அங்கே தன் மனதில் மிகவும் விசன மிருப்பதாகத் தோற்று வித்தது. அப்போது,

சஞ்சீவகன் : மித்திரா ! சுகமா ? என்று கேட்க,

தமனகன் : சேவகனுக்குச் சுகம் எங்கே யிருந்து வரும்? சம்பத்தும் விபத்துங் கூடவே இருக்கின்றன ; ராஜாவுக்குப் பிரியமாய் யாரிருக்கிறார்கள்? யாசகன் சம் மானத்தை யடைவானா? ஆகையால், இந்தக் கால மேது? தனக்கு மித்திரன் யார்? தன் வலி எவ்வளவு? என்று எப்போதும் விசாரித்துக்கொண் டிருக்கவேண் டும் என,

சஞ்சீவகன்: இதைக்கேட்டு, இப்படி ஏன் சொல்லு கிறாய்?' என,

தமனகன் : 'ராஜ காரியத்தில் உண்டாகிய வஞ்ச கத்தை மற்றொருவரோடு சொல்லலாமோ! ராஜா அறிந்தாற் கொல்லுவான். ஆனாலும் நீ என் நம்பிக்கை யாலே சிங்கத்தோடு சிநேகம் பண்ணினதனால் உனக் குச் சொல்லுகிறேன். அஃது என்னவென்றால், அந் தச் சிங்கம் உன்மேல் மிகவுங் கோபமாய் உன்னைக் கொன்று தன்னுடைய சேனைக்கெல்லாம் நல்ல விருந்திட

நினைத்திருக்கிறது என்று சொல்ல, அதைக் கேட்ட வுடனே சஞ்சீவகன் வருத்தத்தோடும் ஆலோசித்துக் கொண்டிருந்தது.

தமனகன்: 'வேறே ஆலோசனை யென்ன? யாதொன்று சம்பவித்ததோ அதற்குத் தக்கதாக நடக்கவேண்டும்' என,

சஞ்சீவகன்: 'நீ சொன்னதெல்லாம் சரிதான். உலகத்திலும் அப்படியே இருக்கிறது. சாதாரணமாய் ஸ்திரீகள் தூர்ச்சனர்களுக்கு வசமா யிருக்கிறார்கள். ராஜாக்கள் துஷ்டர்களைப் பரிபாலிக்கிறார்கள். துஷ்டனுடனே மிகவுஞ் சிநேகித்தால் அவன் விபரீதமாக நினைக்கிறான். குருடனுக்குக் கண்ணாடியைக் காண்பித்தாலுஞ் செவிடன் காதில் உபதேசித்தாலும் அவர்கள் விபரீதமாகவே நினைப்பார்கள்; துஷ்டனும் அப்படியே விபரீதமாக நினைக்கிறான். எப்படிச் சந்தனமரம் பாம்போடு கூடியிருக்குமோ, எவ்வாறு தாமரை முட்களோடு கூடியிருக்குமோ, அப்படியே பெரும்பாலும் ராஜாக்கள் துஷ்டர்களாற் சூழப்பட் டிருக்கிறார்கள். ஆகையால் இப்படிப்பட்ட பொல்லாங்கு நமக்கு நேரிட்டது' என,

தமனகன்: இதைக்கேட்டு, 'அந்தச் சிங்கத்துக்கு வாய்ப் பேச்சு மாத்திரம் தித்திப்பே யல்லாமல், மனது மிகவுங் கடினந்தான். பூர்வம் பிரமா கடலைக் கடக்கிறதற்குக் கப்பல் உண்டாக்கினான். இருட்டைப் போக்கடிக்க விளக்கைச் சிருஷ்டித்தான். யானையை அடக்க அங்குசம் நிருமித்தான். ஆனால் துஷ்டர்களுடைய மனது அடங்கும்படி யாதொன்றுஞ் செய்யாமற் போனான்' என,

சஞ்சீவகன் : இவையெல்லாங் கேட்டுப் பெருமூச் செறிந்து, 'பெரிய பொல்லாங்கு நேரிட்டது, இதினின் றுந் தப்பிக்கொள்ள எனக்குச் சாமர்த்தியமில்லை. எம னுடைய வாயில் அகப்பட்டவன் எப்படித் தப்பிப் போவான்? எப்படி ஒரு குற்றமு மில்லாத ஒட்டையைக் காகம் முதலானவை கூடிக் கொலைசெய்தனவோ அப் படியே வஞ்சனை பண்ணுகிற துஷ்டர்கள் ஒருவனிடத் திற் குற்றமில்லாமலே கொலைசெய்கிறார்கள்' என,

தமனகன் : அஃது எப்படி? அண்ணா! சொல்ல வேண்டும்' என, சஞ்சீவகன் சொல்லும்:

## கதை - 8

ஒரு காட்டில் மதோற்கடன் என்னும் ஒரு சிங்கம் நரியையும், புலியையும், காக்கையையுந் தனக்கு மந் திரிகளாக வைத்துக்கொண்டு அரசாள்கிற காலத்தில் ஒருநாள் அந்தக் காட்டில் ஒட்டகமொன்று வழிதப்பி வரக்கண்டு, மந்திரியாகிய காக்கை "நீ யார்?" என்று கேட்க, அந்த ஒட்டகம், "நான் வழிதப்பி வந்துவிட் டேன்" என்று சொல்ல, அதை இட்டுக்கொண்டு போய்ச் சிங்கத்தினிடத்தில் விட்டு நடந்த காரியத்தைச் சொல்ல, அதைச் சிங்கம் கேட்டு, "பயப்படாதே, நம் முடைய மந்திரிகளுடனே நீயும் ஒரு மந்திரியா யிரு" என்று அதற்கு அபயங் கொடுத்து, மந்தானகன் என்று பெயரிட்டு, அதைத் தன்னிடத்தில் வைத்துக்கொண்டது. இப்படி வெகுகாலஞ் செல்லுகையில் ஒருநாள் சிங்கத்துக் குச் சரீரம் அசக்தமா யிருந்தபடியினால் அம் மூன்றையும் அழைப்பித்து, "இன்றைக்கு என்னால் இரை சம்பாதிக் கக் கூடாது. ஆகையால் நீங்கள் போய் எனக்கு ஏதாவது

# பொருளடக்கம்

இரை கொண்டுவரவேண்டும். பிறகு நான் தின்று மிகுந்ததை நீங்கள் தின்னலாம்'' என, இம் மூன்றுஞ் சிங்கத்தின் கட்டளைப்படி அந்தக் காட்டிற்போய் இரை தேடிப் பார்த்து அகப்படாமையால், அப்போது தங்களோடுகூட இருந்த மந்தானகனைத் தூரத்திற்போம்படி ஒருவேலையிட்டுக் காகம் மற்றை யிருவரையும் பார்த்து, "இன்றைக்கு நாம் மந்தானகனைக் கொல்லுவோம். புல்லுந் தழையுந் தின்கிறவனால் நமக்குப் பிரயோஜனமென்ன?'' என, மற்றிரண்டும், ''சரிதான், ஆனால் அவனுக்கு நம்முடைய ராஜா அபயங் கொடுத்திருக்கிறதனால் அவனை நாம் எப்படிக் கொல்லலாம்! கூடாது'' என, காகம் "நாம் இன்றைக்குச் சிங்கத்தின் கையால் தப்பாமல் மரணமடைவோம். பசியெடுத்தால் தாயும் பிள்ளையை விட்டுவிடுகிறாள்; பாம்பு தான் இட்ட முட்டைகளைக் குடிக்கிறது; ஆகையால் பசியாற் பிடிக்கப்படுகிறவன் எந்தப் பாதகந்தான் பண்ணமாட்டான்? இது உங்களுக்குத் தெரியவில்லையா?" என்று சொல்லி, உடனே சிங்கத்தண்டைபோய்க் காகம், ''சுவாமி! இன்றைக்கு எதுவுங் கிடைக்கவில்லை" என, "ஆனால் இதற்கு என்ன உபாயம் பண்ணலாம்?" என்று சிங்கங் கேட்க, காகம் "தங்கள் அதீனத்தில் இரை இருக்கையில் வேறே ஆலோசிப்பானேன்? வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய் தேடலாமா?" என, சிங்கம் "என்னிடத்து ஆகாரம் எங்கே இருக்கிறது?" என, காகம் "மந்தானகன் என்னும் ஒட்டை யிருக்கிறதே" என, இதைக் கேட்டுச் சிங்கம் பூமியைக் கையாற் றொட்டுச் "சிவ சிவா" எனக் காதின்மேற் கையை வைத்து, ''நான் அவனுக்கு அபயங் கொடுத்திருக்கையில் நீங்கள்

இப்படி விபரீத வார்த்தை சொல்லலாமா! அடைக்கலம் புகுந்தவர்களைக் கைவிடலாமா! பசு, பூமி, தானியம் இவற்றின் தானத்தைக் காட்டிலும் அபய தானம் அதிகம். அசுவமேத புண்ணியத்தைக் காட்டிலும் இந்தப் புண்ணியம் அதிகமென்று சாஸ்திரமும் இருக்கிறதே" எனக் கேட்டு, காகம் "ஐயா! என் ஒரு விண்ணப்பத்தைக் கேட்டருளும். ஒரு குலத்துக்காக ஒருவனை விட்டுவிடலாம், ஒரு கிராம ரக்ஷணைக்காக ஒரு குடும்பத்தைத் துறக்கலாம். ஒரு தேச பாலனத்தின் பொருட்டு ஒரு கிராமத்தைக் கைவிடலாம். தன் நிமித்தம் பூமியை விடலாம். ஆகையால் இது தப்பன்று. ஆகிலும் அவனைத் தாங்கள் கொல்லவேண்டாம்; நாங்களே கொல்லுவோம். இல்லாவிட்டால் அவனே சாவ உடன்பட்டு என்னைக் கொல்லுங்கள் என்பான், அப்போது நாங்கள் கொல்லுவோம்" என்று சொல்ல, சிங்கம் சும்மா இருந்தது. பிறகு காகம் அதையே கட்டளையாக நினைத்துக்கொண்டு போய், மற்றை யிரண்டையும் இட்டுக்கொண்டு சிங்கத்தின் கிட்ட வந்து, "சுவாமி! இன்றைக்கு ஆகாரம் ஒன்றும் அகப்படவில்லை, அதனால் உங்களுக்குப் பட்டினி யிருக்கலாயிற்று; அப்படி இராமல் என்னைப் புசிக்கலாம்" என, சிங்கம் "நீ எவ்வளவு! உன்னை உண்டதனால் என் பசி தீருமா! உன் உடல் என் கடைவாய்ப் பல்லுக்குப் போதுமா!" என்று கேட்க, நரி "அப்படியானால் என்னைத் தின்னும்" என்று நிற்க, "நீயும் அப்படித்தான், நீ அதிகமல்ல" என்று சிங்கம் மறுக்க, புலி "இவ்விருவரிலும் நான் பெருத்திருக்கிறதினால் என்னைப் பக்ஷித்துப் பசி தீரும்" என, சிங்கம் "நீதான் எனக்கு எவ்வளவு இரை?

உன்னைப் பெரிதாக நினைத்துக்கொண்டிருக்கிறையோ!" என்று சொல்ல, ஒட்டகம் இதைப் பார்த்து, "சுவாமி! நான் எல்லாரைக் காட்டிலும் பெருத்திருக்கவில்லையா! சித்தமானால் என்னைக் கொள்ளலாம்" என, இதைக் கேட்டவுடனே புலியும் நரியும் பாய்ந்து விழுந்து அந்த க்ஷணமே, ஐயோ! அதைக் கொன்று எல்லாம் புசித்தன. ஆகையால் எங்கே மிகவும் கீழ்கள் இருக்குமோ அங்கே சுகம் இராது, பிராணனுக்கு நாசம் வருமென்றே நினைக்கவேண்டும். இவ்விடத்திலும் அப்படியே இருக்கிறது. ஆனால், துஷ்டர் கையில் அகப்பட்டுச் சும்மா இறக்கிறதைக் காட்டிலுஞ் சண்டை செய்வதே யோக்கியம். ஏனென்றால், சண்டை முனையிற் செத்தாற் சொர்க்க மடைகிறான், சத்துருவைச் செயித்தால் ராஜ்ய மடைகிறான்; ஆதலால், சூரனுக்குச் சாவும் பிழைப்புஞ் சமானம்' என்றது.

தமனகன்: அதைக் கேட்டு, 'பகைவர்களுடைய பராக்கிரமத்தை அறியாமல் எவன் பகைத்துக்கொள்ளுகிறானோ அவன் சமுத்திரஞ் சிட்டுக்குருவியினால் எப்படி அவமான மடைந்ததோ அப்படியே அவமான மடைவான்' என, அப்போது, 'தம்பி! அஃது எப்படி?' என்று சஞ்சீவகன் கேட்கத் தமனகன் சொல்லும்:

## கதை - 9

சமுத்திரக் கரையில் இரண்டு சிட்டுக்கள் ஆணும் பெண்ணுமாய் ஒரு செடியின்கீழ்க் கூடு கட்டிக்கொண்டு இருக்கும்போது, பெட்டை ஆண்பறவையைப் பார்த்து, "எங்கே முட்டையிடலாம்?" என்று கேட்க, ஆண் "இதுவே நல்ல இடம்" என்று சொல்ல, பெண் "இங்

தக் கடற்கரையில் ஒருவேளை அபாயம் நேரிடும்" என, ஆண் சிட்டு "சமுத்திரத்திற்கு என்னுடனே பகைத்துக்கொள்ளச் சாமர்த்திய மில்லை" என, பெண் "உனக்குஞ் சமுத்திரத்திற்கும் வெகு தாரதம்மிய மிருக்கின்றதே, எவன் தன் வலியும் பிறன் வலியும் பார்க்கிறதில்லையோ அவன் விபத்தை யடைவான்; எவன் பார்க்கிறானோ அவன் சுகமடைவான். மேலும், தனக்கு இதம் பண்ணுகிற மித்திரன் பேச்சைக் கேளாதவன் ஆமை எப்படிக் கழியை விட்டு மரண மடைந்ததோ அப்படியே மரணமடைவான்" என, ஆண் "அஃது எப்படி? பெண்ணே, சொல்லாய்" என, பெட்டைக் குருவி சொல்லும்:

## கதை - 10

"விகட சங்கட ரென்னும் இரண்டன்னங்களுங் கம்புக்கிரீவன் என்னும் ஆமையும் சிநேகமாய் ஒரு குளத்தில் வாழ்ந்துகொண் டிருக்கையில், அன்னங்கள் இப்போது இங்கே மழை பெய்யாமையாற் குளம் வற்றிப் போ மாகையால் இனி வேறொரு குளத்திற் போய்ச் சேர்வது யோக்கியம் என்று நினைத்து, இதை நம்முடைய சிநேகிதனுக்குஞ் சொல்லவேண்டுமென்று ஆலோசித்து அப்படியே அதற்குச் சொல்லும்போது, கம்புக்கிரீவன் 'நீங்கள் செப்பட்டையினாற் பறந்து போவீர்கள், நான் வேறோரிடத்திற்கு எப்படி வருவேன்' என, விகட சங்கடர்கள் 'எங்கள் வார்த்தையில் நம்பிக்கை வைத்து ஸ்திரமா யிருப்பையானால் உன்னையும் கொண்டுபோவோம். கொண்டுபோகையில் வழியில் ஏதொன்றும் பேசாமலிருந்தாற் போகக் கூடும்' என்று சொல்லி

ஒரு கழி கொண்டுவந்து, ஆமையைப் பார்த்து, இந்தக் கழியைப் பல்லினாலே பலமாய்க் கடித்துப் பிடித்துக் கொள்; விட்டுவிடாதே; நாங்கள் இருவரும் இதை இரு புறத்திலும் மூக்காற் கௌவிக்கொண்டு ஆகாச மார்க்கமாய்ப் போகிறோம்' என்று சொல்லி அந்தக் கொம்பை இரண்டும் பற்றிக்கொண்டு எழும்பிப் பறந்து போகையில், இதை ஒரு பட்டணத்துச் சனங்கள் பார்த்து அதிசயித்து நகைத்து எல்லோரும் ஒருமிக்க, 'ஆ! இஃதென்ன! இரண்டு பறவைகள் ஒரு கழியைத் தூக்கிக் கொண்டு அதை ஆமையாற் பிடிப்பித்துக்கொண்டு போகின்றன' என்று இப்படிப் பேரிரைச்சலிட்டுப் பேசினார்கள். அதைக் கேட்டுக் கம்புக்கிரீவன் இந்த இரைச்சல் எங்கிருந்து உண்டாகிறதென்று சொல்வதற்கு வாய் திறந்தவுடனே கழியினின்று விடுபட்டுப் பூமியில் விழுந்தது. அப்போது அங்கே யிருந்த புலால் தின்பவர்கள் உடனே அதைக் கொன்று தின்றார்கள். ஆகையால் தனக்கு இதம் பண்ணுகிறவர்கள் பேச்சை அசட்டை பண்ணலாகாது. மேலும், யாதொரு காரியம் நேரிடுவதற்கு முன்னேதானே ஆலோசிக்கிறவனும், வருகிறபோதே ஆராய்கிறவனுஞ் சுகமடைவார்கள். இதைவிட்டு யாதொன்று வரத்தக்கதோ அது வரட்டுமென்று யார் சொல்லுகிறானோ அவன் வந்தபின் காப்போன் என்னும் மீனைப் போல் நாசமடைவான்'' என, சேவல் "அஃது எப்படி?" என, பெட்டைச் சிட்டு சொல்லும்

## கதை - 11

"ஒரு பெரிய குளத்தில் வருமுன் காப்பவனென்றும், வருங்காற் காப்பவனென்றும், வந்தபின் காப்பவ

னென்றும் மூன்று மீன்கள் அநேக நாளாய் வாழ்ந்து கொண்டிருக்கும் நாளில் ஒருநாள், வலைகாரர் வந்து இதிலே தண்ணீர் கொஞ்சமா யிருக்கிறதாகையால் நாளை வந்து இதிலிருக்கிற மீன்களை யெல்லாம் பிடிப்போ மென்று பேசிக்கொண்டதை வருமுன் காப்பவன் கேட்டுத் தன் சிநேகிதரிடத்திற் போய், 'நாம் இவ்விடம் விட்டுச் சீக்கிரமாகப் புறப்படவேண்டும், இனி இங்கே ஒரு நிமிஷ நேரமும் இருக்கலாகாது' என, இதைக் கேட்டு வருங்காற் காப்பவன் 'நமக்கு விபத்து வரும் போது பார்த்துக்கொள்ளுவோம், காரியம் நேரிடும் போது அதற்குத் தக்கதாகப் புத்தி உண்டாகும்' என்றது. வந்தபின் காப்பவன் 'தன்னிடத்தை விட்டுவிடு கிறதுதான் மூர்க்கத்தனம். ஏனென்றால், எது வரத் தக்கதோ அது வரவே வரும். யாதொன்று வரத் தகாததோ அதை நாம் வருந்தி அழைத்தாலும் வாராது. ஆதலால் நான் வரமாட்டேன்' என்று சொல்லி அந்தக் குளத்திலேயே இருந்தது. வருமுன் காப்பவனோ வேறிடத்துக்குப் போய்விட்டது. மறுநாள் உதயத்தில் செம்படவர் வந்து வலை யெறிந்து மீன்களைப் பிடித்தார்கள். அதில் வருங்காற் காப்பவன் அகப்பட்டுச் செத்தாற்போற் பாசாங்கு பண்ணிக்கொண் டிருந்தது. அதைப் பார்த்து இது செத்ததென்று எண்ணிக்கொண்டு செம்படவன் அதைக் கரைமேற் போட்டுவைத்தான். இதற்குள்ளே அஃது அவன் கண்ணுக்குத் தப்பித் தண்ணீரிற் புகுந்து ஒளித்துக்கொண்டது. பிறகு வந்த பின் காப்பவன் வலைக்குள் அகப்பட்டு இப்போது என்ன செய்யலாமென்று அங்குமிங்கும் ஓட, அதைச் செம்படவன் கண்டு தடியாலடித்துக் கொன்றான். மற்றிரண்

டும் சுகமடைந்தன. ஆகையால் எதையும் ஆலோசித்துச் செய்யவேண்டும்" என்றுசொல்லிப் பிறகு புருஷன் சொற்படி அங்கேதானே முட்டையிட்டது.

அப்போது சமுத்திரம் அதன் வல்லமையை அறியாமல் முட்டைகளை அடித்துக்கொண்டு போயிற்று. சிட்டு அதைப் பார்த்து வெகு துக்கமாய்ச் சேவலுடனே, "சுவாமீ! தங்களுக்குப் பெரிய சங்கடம் வந்தது; ஏனென்றால், முட்டைகளைச் சமுத்திரங் கொண்டு போயிற்று; இப்போது என்ன செய்யலாம்?" என, சேவல் "நீ பயப்படாதே, நான் முட்டைகளைக் கொண்டு வருவேன், என் திராணியைப் பார்" என்று சொல்லி எல்லாப் பறவைகளையுங் கூட்டமாய்க் கூட்டிக்கொண்டு கருடனைச் சரணமடைந்தது. கருடன் அதை விஷ்ணுவுக்கு அறிவித்து, "அப் பறவை மிகவும் வருத்தப்படுகிறதாகையால் அதன் முட்டைகளைக் கொடுப்பிக்க வேண்டும்" என, விஷ்ணு சமுத்திரத்தைப் பார்த்து, "அதன் முட்டைகளைச் சீக்கிரமாய்க் கொடு" என்று கட்டளையிட்டவுடனே, சமுத்திரம் முட்டைகளைக் கொண்டு வந்து கொடுத்தது. ஆகையால், சத்துருக்களுடைய பராக்கிரமம் அறியாமற் பகைத்துக்கொள்ள லாகாது. ஆனால் அஃது அந்தச் சிங்கத்திற்கு அகங்காரத்தினாற் றெரியவில்லை என.

சஞ்சீவகன்: தமனகனைப் பார்த்து, நல்லது, அந்தச் சிங்கத்தின் சண்டைக்குறி எப்படியிருக்கும்? சொல்' என.

தமனகன்: எப்போது அவன் காதுகளை நெறித்துக்கொண்டு வாலைத் தூக்குவானோ அப்போது கொல்ல நினைத்தானென்று அறியவேண்டும், அக்காலத்தில் அப்

படியே நீயும் அவனுக்கு முன்னே இருக்கவேண்டும், அந்த விரனுகிய உனக்குத் தெரியாதா? எல்லாம் தெரிந்தவர்கட்குச் சொல்வானேன் ?' எனச் சொல்லி விட்டு மறுபடி கரடகனிடத்திற்குப் போயிற்று.

அப்போது, கரடகன் 'என்ன ஆயிற்று ? சொல் என, தமனகன் 'காரியம் முடிந்தது ; இவருடைய சிநே கத்தின் வாயில் மண் விழுந்தது. இப்போது நான் சிங் கத்தின் கோபக் குறி இப்படி இருக்குமென்று சஞ்சீவக னுக்குச் சொன்னபடியே செய்விக்கிறேன்' என்று பிங் களனிடத்திற்குப் போய் அப்படியே அதைச் செய் வித்தது

பிறகு சஞ்சீவகன் சிங்கமிருக்கும் இடத்துக்கு வந்து பார்க்கும்போது, அது முன் தனக்குத் தமனகன் சொன்னபடியே யிருக்கக்கண்டு, மிகவும் விசனமடைந்து பராக்கிரமத்திலேயே பிராணனை விடவேண்டுமென்று நிச்சயித்து யுத்தத்திற்கு ஆரம்பிக்கவே இரண்டுக்கும் பெரிய சண்டை விளைந்தது.

கரடகன் அதைப் பார்த்து, 'தமனகா! துஷ்டா! உன் சேர்க்கையால் ராஜாவுக்குஞ் சிநேகனுக்குஞ் சண்டையுண்டாயிற்று. ராஜநீதியில் சாம தான பேத தண்ட மென்னும் நான்கு உபாயங்கள் இருக்கின்றன. அவைகளிற் சாமமென்னும் உபாயம் முக்கியமானது ; ஏனென்றால், அதனுற் காரியசித்தி உண்டாகிறதுபோல மற்றவைகளால் உண்டாகாது ; பகை இருந்தாலும் சாம உபாயத்தாலேயே போம். இப்படி யிருக்கையில் நீ ராஜாவைப் பெரிய பொல்லாப்பில் விழுவித்தாய். ராஜாக்களிற் சிலர் ஈனர்களுடைய புத்தியைக் கேட்டுச்

சங்கடம் அடைகிறார்கள். ஆகையால், குணவந்தர்களு
டைய கூட்டுறவு ராஜாக்களுக்கு இருக்கவேண்டும்.
கபடியா யிருக்கிற பிரதானி புத்திசாலியானாலும் அவன்
ஒருபோதும் ராஜாவண்டையில் இருக்கலாகாது. மற்
றும், தானே சம்பத்தை அடையவேண்டுமென்று நினை
த்து ராஜாவினிடத்தில் வேறொருவன் சேரலாகாதென்று
இச்சிப்பவனும் ராஜாவுக்கு உபயோகியாகான். ஏனென்
றால், பல பெயர் சமர்த்தர்கள் ராஜாவினிடத்தி லிருந்
தால் ராஜா பிரகாசிப்பான்; ஆசைக்காரரும் துஷ்டரு
மாகிய இவர்களுடைய கூட்டுறவால் ராஜா பிரகாசிக்க
மாட்டான். தன்னைவிட ராஜாவினிடத்தில் வேறொரு
வன் இருக்கலாகாதென்று யார் இச்சிக்கிறானோ அவனை
ராஜாவுக்குச் சத்துருவென்று நினைக்கவேண்டும். அப்
படியே நீ இந்தத் தீங்கு விளைத்தாய். எசமானனுடைய
தயை கிடைத்தால் சேவகர்கள் கர்வங்கொள்ளாமல் மிக
வும் அடக்கமாயிருக்கவேண்டும், நீ அதைவிட்டு விபரீத
மாக நடக்கிறாய். "பிதாவைப் போல் இருப்பான் புத்
திரன்" என்பதை நீ பொய்யாக்கினாய். இப்போது
உனக்கு நான் என்ன சொல்வேன்? கொக்கு குரங்கு
க்கு உபதேசம்பண்ணி எப்படி இறந்ததோ அப்படி
உன்னாலே நான் மரணமடைவேன் என்று எனக்குத்
தோன்றுகிறது' என்று இப்படிச் சொன்னதைக்
கேட்டுத் தமனகன் 'அஃது எப்படி? சொல்' என,
கரடகன் சொல்லும்:

## கதை - 12

பென்று நினைத்துக் குளிர் காய்வதற்காக அவைகளி னருகே போயிற்று. அப்போது அங்கே ஒரு மரத்தின் மேல் இருந்த சுமுகன் என்னும் ஒரு பறவை இதைப் பார்த்துக் குரங்குகளின் அருகே வந்து, "இவை மின் மினிப் பூச்சிகள், நெருப்பல்ல" என்று சொன்னவுடனே, அந்தக் குரங்குக் கூட்டத்தில் ஒன்று கோபித்து அந்தப் பக்ஷியைப் பிடித்து, "எனக்கு நீ புத்தி சொல்லுகிற வனு ?" என்று கல்லில் அறைந்து கொன்றது. ஆகை யால், துஷ்டர்களுக்கு உபதேசம் பண்ணலாகாது' என்று சொல்ல, தமனகன் ஒன்றும் பேசாமல் மௌனமா யிருந்து, மனதில் மிகவும் விசனப்பட்டு, 'நான் இந்தப் பாதகம் பண்ணினேன்' என்று சொல்ல, மறுபடியுங் கரடகன் 'அடா தமனகா! இப்பேர்க்கொத்த நடத்தை யினுலே துஷ்டபுத்தியைப் போல நீயும் நாசமடைவாய்' என, அப்போது தமனகன் 'துஷ்டபுத்தி எப்படிக் கெட்டான்? சொல்' என, கரடகன் சொல்லும் :

## கதை - 13

துஷ்டபுத்தி, சுபுத்தி என்னும் இரண்டு செட்டிப் பிள்ளைகள் பணஞ் சம்பாதிப்பதற்காகத் தேசாந்தரம் போனுர்கள். அவ்விடத்தில் சுபுத்திக்குப் பூமியில் ஒரு பணப்புதையல் அகப்பட்டது. அதை அவன் சிநேகத்தி னுலே துஷ்டபுத்தியுடனே சொல்ல, துஷ்டபுத்தி "அந் தத் திரவியத்தை இங்கேயே புதைத்து வைத்துவிட்டுக் கொஞ்சம் பணமெடுத்துக்கொண்டு போவோம்" என, சுபுத்தியும் அதற்குச் சம்மதிக்க, அதிற் கொஞ்சம் பண மெடுத்துக்கொண்டு, மற்றைப் பணத்தை ஒரு மரத்தடியிற் பள்ளந்தோண்டி அதிலே புதைத்துவைத்து

விட்டு இருவரும் வீட்டுக்குப்போய்ப் பழையபடி சிநேகமா யிருந்தார்கள். அப்படி யிருக்கையில், ஒருநாள் துஷ்டபுத்தி தனியேபோய் அந்தப் பொருளை யெல்லாம் எடுத்துக்கொண்டு வீட்டுக்கு வந்துவிட்டான். பிறகு சில நாட் கழித்துத்துஷ்டபுத்தி சுபுத்தியைப்பார்த்து, "அந்த நம்முடைய திரவியத்தைக் கொண்டு வருவோம்" என, இருவரும் போய் அந்தவிடத்திற் பார்க்குமளவில் அங்கு ஒன்றும் இல்லாமையால், துஷ்டபுத்தி மிகவும் வருத்தப் படும் சுபுத்தியைப் பார்த்து, "இங்கிருந்த பணத்தை நீயே கொண்டுபோனாய், மேலும் கபடமாய் வருத்தப்படுகிறாய்" என்று சொல்லிக் கலகப்பட்டு இதை ராஜாவுக்கு அறிவித்தான். ராஜா நியாயாதிபதியை யழைப்பித்து, "இதைப் பஞ்சாயத்திலே தீர்க்க வேண்டும்" எனக் கட்டளையிட, அவன் "ஐந்து நாளைக்குள்ளே தீர்த்துப் போடுகிறேன்" என்று ராஜாவின் முன்னே கெடு வைத்துக்கொண்டு வந்து பஞ்சாயத்துக்கு ஆரம்பித்தான். அப்போது துஷ்டபுத்தி "எனக்குச் சாக்ஷி யிருக்கிறது, அந்தச் சாக்ஷியை இப்போதே கேட்கலாம்" என, பஞ்சாயத்தார் "உன் சாக்ஷியைக் கொண்டு வா" என்றார்கள். துஷ்டபுத்தி வீட்டுக்குப்போய்த் தன் தகப்பனுடனே, "அப்பா! உம்முடைய ஒரு பேச்சால் எனக்குப் பதினாயிரம் வராகன் வரைக்கும் கிடைக்கும்" என்று சொல்ல, கிழவன் "எப்படிக் கிடைக்கும்? சொல்" என, துஷ்டபுத்தி "நீர் மரப் பொந்தில் இராத்திரிக்குப் போய் உட்காந்திருக்க வேண்டும்; அங்கே நியாயாதிபதி முதலானோர் வந்து, அங்கிருந்த பணத்தை யார் கொண்டுபோனார்கள் என்னும்போது, நீர் சுபுத்தி கொண்டுபோனான் என்றால் என் காரிய மாகும்" என,

இதைக்கேட்டுப் பிதா "பொல்லாங்கு நேரிடுகிற காரியத்தைப் பண்ணிச் சுகமடைய வேண்டுமென்று இச்சிப்பது கொக்கினுடைய மூடத்தனத்திற்கு ஒப்பாகும்" என, துஷ்டபுத்தி "அஃது எப்படி?" என, பிதா சொல்லுவான்:

## கதை - 14

"தான் பொரிக்குங் குஞ்சுகளை யெல்லாம் ஒரு பாம்பு தின்னப் பறிகொடுத்துக்கொண்டு வரும் ஒரு மூடக் கொக்கு, அப்போது பொரித்த தன் குஞ்சுகளைக் காப்பாற்றுவதைக் குறித்து என்ன செய்யலாம் என்று பெண் கொக்கோடுகூட ஏரிகரையில் உட்கார்ந்து ஆலோசித்துக்கொண்டிருக்கையில், அக் கொக்கின் சிநேகிதனாகிய குளிரன் என்னும் பெயரையுடைய நண்டு கொக்குகளைப் பார்த்து, 'இன்றைக்கேன் நீங்கள் வியாகுலமா யிருக்கிறீர்கள்?' என, அவைகள் தங்கள் விருத்தாந்த மெல்லாஞ் சொல்லக் குளிரன் அதைக் கேட்டு ஆண் கொக்கைப் பார்த்து, 'நல்லது, உனக்குப் பாம்பைக் கொல்லுகிற உபாயம் ஒன்று சொல்லுகிறேன். என்னென்றால், கீரிப்பிள்ளையின் வளைமுதற்கொண்டு பாம்பு இருக்கும் இடமட்டும் மீன்களை இறைத்து வைத்தாற் காரியசித்தியாகும்' என்றது. பிறகு கொக்கு அப்படியே செய்யக் கீரிப்பிள்ளை தன்வளையினின்றும் புறப்பட்டு மீன்களைத் தின்றுகொண்டே போய்ப் பாம்பையுங் கடித்து எறிந்துவிட்டுக் கொக்கின் குஞ்சுகளையுஞ் சாப்பிட்டது. ஆகையால் இப்படிப்பட்ட ஆலோசனை பண்ணலாகாது" என, துஷ்டபுத்தி பிதா சொன்னதைக் கேளாமல் அவனைப் பலவந்தமாக இழுத்துக்கொ

ண்டுவந்து, மரப்பொந்தில் உட்காருவித்து, விடியற்காலத்தில் நியாயாதிபதி முதலாகிய பேரையும் சுபுத்தி முதலானோரையும் அவ்விடத்திற்கு இட்டுக்கொண்டு போய், " சாக்ஷி இந்த மரத்தைக் கேளுங்கள் " என்றான். அப்போது அந்த மரத்திலிருந்து " இங்கிருந்த பணமுழுதுஞ் சுபுத்தியே கொண்டுபோனான் " என்று ஒரு சத்தம் புறப்பட்டது. சுபுத்தி இஃது என்னவோ மோசமாயிருக்கிறது ! இங்கே ஒரு பிராணி இல்லாமல் தொனி எங்கேயிருந்து புறப்பட்டது ! இது தெய்விகமாக இருந்தால் மெய்யல்லவோ சொல்ல வேண்டும் ! என்று இப்படித் தனக்குள் எண்ணமிட்டுக்கொண்டு அந்த மரத்தின் மேல் ஏறிச் சோதிக்கையில் அதில் ஒரு பொந்து காணப்பட்டது. உடனே இங்கே கிருத்திரிமம் இருக்குமென்று எண்ணி அங்கே நெருப்பை மூட்டிப் பற்றுவித்தான். உள்ளேயிருந்த கிழவன் பாதி வெகிறமட்டும் பல்லைக் கடித்துக்கொண்டிருந்து, பொறுக்கப் போகாமல் அலறிக்கொண்டு வெளியே வந்து விழுந்தான். அப்போது அங்கிருந்தோர் எல்லோரும் " இஃதென்ன ! இஃதென்ன ! " எனக் கேட்கக் கிழவன் " என் பிள்ளை துஷ்டபுத்தி கபடத்தினால் என்னைப் பலாத்காரமாகக் கொண்டுவந்து இங்கே வைத்தான் " என்று சொல்லி இறந்துபோனான். நியாயாதிபதி இதைப் பார்த்து, ராஜாவுக்கு விண்ணப்பம் பண்ண, பிறகு துஷ்டபுத்தி வாயினாலேயே ராஜா எல்லாம் அறிந்துகொண்டு அவனைக் கழுவில் ஏற்றினான் ' என்று சொல்லிப் பின்னும் தமனகனைப் பார்த்து, ' பாம்பை வெகுநாள் வளர்த்தாலும் அஃது எப்படியும் வளர்த்தவனையே கடிக்கும் ; ஆகையால் எனக்கு உன்னிடத்திற்

பயம் தோன்றுகின்றது. இனிமேல் உன்னிடத்தில் தேவதத்தனைப்போல் நடந்துகொள்ள வேண்டும்' என, அதைக் கேட்டுத் தமனகன் 'தேவதத்தன் எப்படி நடந்துகொண்டான்? சொல் என, கரடகன் சொல்லும் :

## கதை - 15

ஒரு பட்டணத்தில் தேவதத்தன் என்னும் ஒரு சாவகாரி தான் திரவியமிழந்ததால் மறுபடி திரவியம் சம்பாதிக்க நினைத்துத் தேசாந்தரம் போகப் புறப்படும்போது, தன்வசத்திலிருந்த ஆயிரம் இரும்புக் கம்பிகளை அவ்விடத் திருந்த தன் சிநேகிதனிடத்தில் வைத்துவிட்டுப் போனான். போன விடத்தில் திரவிய சம்பாத்தியத்தைக் குறித்து அநேக உபாயம் பண்ணியும் பணம் அகப்படாமையால், மீண்டும் வீட்டுக்கு வந்து தன்னுடைய இரும்புக்கம்பிகளைக் கேட்டான். வைத்துக்கொண்ட சிநேகிதன் மிகுந்த துராசையினால் "இரும்புக்கம்பிகளை எலிகள் தின்றுவிட்டன" என்றான். இவன் இந்த அபூர்வத்தைக் கேட்டு, "நல்லது, இருக்கட்டும்" என்று சொல்லி வீட்டுக்குப் போனான். பிறகு ஒருநாள் சிநேகிதன் பிள்ளையை விளையாடுகிறதற்காக அவனிடத்திலிருந்து எடுத்துக்கொண்டுபோய் மற்றொரு வீட்டில் ஒளித்துவைத்துப் பின்பு சிநேகிதனிடத்தில் வந்து உட்கார்ந்தான். அவன் "உன்னிடத்தி லிருந்த என் பிள்ளை எங்கே?" என, சாவகாரி "பிள்ளையைப் பறவை தூக்கிக்கொண்டு போயிற்று" என்றான். இதை அவன் கேட்டு மிகவுங் கிலேசப்பட்டு இவனை இழுத்துக் கொண்டு ஊரதிகாரியண்டைபோய், "இந்தத் துஷ்டன்

என் பிள்ளையைக் கொண்டுபோய் ஒளித்துவைத்துவிட்டுப் பிள்ளையைப் பக்ஷி எடுத்துக்கொண்டு போயிற்று என்கிறுன்; ஆகையால், என் பிள்ளையை எனக்குக் கொடுப்பிக்க வேண்டும்" என, அதிகாரி இதைக் கேட்டுச் சாவகாரியை அழைத்து, "இவன் பிள்ளை எங்கேயிருக்கிறது? சொல்" என, அவன் "இவன் பிள்ளையைப் பக்ஷி கொண்டுபோயிற்று" என, அதிகாரி இதைக் கேட்டுக் குலுங்க நகைத்து, "இந்த அசம்பவம் இது வரைக்கும் உலகத்தில் இல்லை; அப்படியிருக்க, நீ எப்படிச் சொல்லுகிறுய்?" என, அப்போது அவன் "இஃது ஒரு ஆச்சரியமா? எப்படி இரும்புக்கம்பிகளை எலிகள் தின்றுவிட்டனவோ அப்படியே இதுவுஞ் சம்பவித்தது ஆண்டவனே!" என, இதைக் கேட்டு நியாயாதிபதி முன் நடந்தவைகளை விசாரித்து அறிந்துகொண்டு, "அவனுடைய இரும்புக் கம்பிகளை நீ கொண்டு வந்து கொடுத்தால், அவன் உன் பிள்ளையைக் கொண்டு வந்து கொடுப்பான்" என்றவுடனே அவ்விருவரும் அப்படியே செய்து தங்கள் வீட்டுக்குப் போனார்கள்' என்றிப்படிப்பட்ட கதைகளைச் சொல்லிப் பின்னும், 'சொன்ன பொருளைத் தெரிந்து கொள்ளாதவன் கல்லுக்குச் சமானம், அவனுக்கு உபதேசித்துப் பயனில்லை' என்றது.

பின் கரடக தமனக நரிகள் இரண்டும் பிங்களனிடத்திற்குப் போயின. அப்போது பிங்களன் சஞ்சீவகனோடு கூடச் சண்டைபண்ணி அதைக் கொன்றுவிட்டு விசனமா யுட்கார்ந்திருந்தது. இதைக் கண்டு தமனகன் ராஜாவைப் பார்த்து, 'சுவாமி! தாங்கள் சத்துருவைக் கொன்று துக்கப்படுகிறீர்கள்;

இது நியாயமல்லவே. சத்துருவைக் கொல்லவேண்டு மென்று சாஸ்திர மிருக்கிறது. பிதாவானாலும், பந்து வானாலும், புத்திரனானாலும், மித்திரனானாலும் இவர் களில் யார் தன்னைக் கொல்லப் பிரவர்த்திக்கிறானோ அவனை ராஜா கொல்லவேண்டும்; துஷ்ட சிநேகிதனும், விபரீத சேவகனும், அஜாக்கிரதையான மந்திரியும், நன்றி யறியாதவனும் இருக்கலாகாது. மேலும், மெய், பொய், கடுமை, மென்மை, கொலை, தயை, உதாரத்து வம், லோபத்துவம், பலவழியாகத் திரவியஞ் சம்பா தித்தல், வெகு பெயருடைய சிநேகிதம், இப்படிப்பட்ட பல குணங்கள் ராஜாவுக்கு இருக்கவேண்டுமென்று ராஜ நீதியில் இருக்கின்றது; அப்படியே தாங்கள் இது செய் தீர்கள்' என்று சொல்லிச் சந்தோஷிப்பித்தது. பிறகு சிங்கம் அந்தக் காட்டில் முன்போலத் தன் ராஜ்யத்தை அனுபவித்துக்கொண்டு சுகமா யிருந்தது."

## இரண்டாவது

# சுகிர்ல்லாபம்.

"புத்திசாலிகளா யிருக்கிற சிநேகிதர்கள் திரவிய மில்லாதிருந்தாலும், வேறே சாதனங்கள் இல்லாதிருந்தாலும், காகமும், எலியும், ஆமையும், மானும் நட்பினால் ஒன்றை ஒன்று காப்பாற்றினாற்போல் ஒருவர்க் கொருவர் உதவுவார்கள்" எனச் சோமசன்மா சொல்ல, ராஜகுமாரர்கள் "அஃது எப்படி?" என, அவன் சொல்லுவான் :

"கோதாவரிக் கரையிலுள்ள ஒரு பெரிய வன்னி மரத்தில் லகுபதன னென்னுங் காகம் வாசஞ்செய்து கொண்டிருக்கையில், ஒருநாள் விடியற்காலத்தில் அங்கே எமனைப்போல மிகவும் பயங்கரமான வேடன் ஒருவன் வந்தான். லகுபதனன் அவனைப் பார்த்துப் பயப்பட்டு இந்தத் துராத்மா என்ன பண்ணுவானோ தெரியவில்லை ஆகையால் இதைச் சோதிக்க வேண்டுமென்று, இரை தேடுகிற யத்தனத்தை விட்டிருக்க, இதற்குள்ளே அவ்வேடன் வலையை விரித்துப் பலவகைப்பட்ட தானியத்தைத் தெளித்து அங்கே ஒரு செடிமறைவிற் பதுங்கிக் கொண்டிருந்தான். அதன்பிறகு தன் பரிவாரத்தோடு அந்த மரத்தில் வந் திறங்கின சித்திரக்கிரீவ னென்னும் புறு அரசு அங்கே இறைத்திருக்குந் தானியத்தைப் பார்த்துத் தன் பரிவாரப் புறுக்களுடனே, 'இந்த நிர்மா

னுஷ்யமான காட்டிலே தானியம் எப்படி வரும்? யாரா யினுங் கொண்டுவந்து போட்டிருக்கவேண்டும்; இது நமக்குத் தெரிந்தாலல்லாமல் இதைப் பக்ஷிக்கலாகாது. ஏனென்றால், ஒரு பிராமணன் பொற் காப்புக்கு ஆசைப் பட்டுப் புலியினால் எப்படி மரணமடைந்தானோ அப்படி இஃது ஏதோ ஒரு விபரீதமாகத் தோன்றுகிறது' என, புறுக்கள் அதைக்கேட்டு 'அஃது எப்படி? மஹா ராஜாவே' என, சித்திரக்கிரீவன் சொல்லும்

## கதை - 1

நான் தென்காட்டில் மேய்ந்துகொண் டிருக்கை யிற் பார்த்தேன், அதைக் கேளுங்கள். ஒரு கிழப்புலி பலவீனத்தால் ஆகாரஞ் சம்பாதிக்கக் கூடாமல் ஓர் ஏரி கரையில் நீராடிக் கையிலே தருப்பை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருக்கையில் ஒரு பிராமணன் அந்த வழியில் வந்தான். புலி அவனைப் பார்த்து, "ஓ பிராமணா! இந்தப் பொற்காப்புத் தருகிறேன் வா" என, இதைக் கேட்டு அப் பிராமணன் அந்தப் புலியைப் பார்த்து ஆலோசிப்பான்: இந்தக் காப்பு நமக்கு வலியக் கிடைக் கிறது, ஆனால் மரணத்துக் கிடமாகிய புலியின் கிட்டப் போகலாகாது, ஆகையால் இந்தக் காப்பில் ஆசை வைக்கலாகாது என்போமானால், மரணத்துக்கு நாலண் டையும் வழி; ஆதலால், இதைக் குறித்துப் பிரயத் தனம் அவசியம் பண்ணவேண்டும். இவ்விதமாகத் தன் துராசைக்கேற்பத் தனக்குள்ளே நிச்சயித்துக்கொண்டு புலியைப் பார்த்து, "ஐயா புலியாரே! காப்பு எங்கே யிருக்கிறது?" என புலி கையில் வைத்துக்கொண்டு "இதோ பார் 'பிராமணோத்தமா" எனக் காண்

பித்தது. பிராமணன் "உன்னிடத்தில் எனக்கு எப்படி நம்பிக்கை?" என, புலி "நான் வைகறையில் மூழ்கி நித்திய தானம் பண்ணிக்கொண் டிருக்கிறேன், நகமும் பல்லும் போன கிழவனு மிருக்கிறேன். இப்போதும் என்னிடத்தில் நம்பிக்கை யில்லையா? வேட்டல், ஓதல், கொடுத்தல், தவம், சத்தியம், உறுதி, பொறுமை, ஆசையின்மை யென்னும் இவ்வெட்டுத் தருமங்களையும் நான் அறிந்திருக்கிறதனால் இந்த அபூர்வ வஸ்துவை யார்க்காகிலுங் கொடுக்க இச்சிக்கிறேன். இதனால் என்னிடத்தில் நற்குண மிருக்கிறதென்றும் எவ்வளவாகிலுந் துர்க்குண மில்லை யென்றும் அறியவில்லையா?" என்றது. அப்போது பிராமணன் 'இது மெய்தான், ஆனால் புலி மனிதரை யடித்துத் தின்னுகிறதென்று மிகவும் லோகாபவாத மிருக்கிறது" என, புலி "நான் தரும சாஸ்திரமும் அறிந்திருக்கிறேன். தம் பிராணன் தமக்கு எப்படித் தித்திப்போ அப்படியே எல்லார்க்கு மிருக்குமென்றறிந்து சாதுக்கள் பிராணிகளிடத்திலே தயையா யிருக்கிறார்கள். தமக்குப் போலவே சுகதுக்கங்கள் பிறர்க்கு மிருக்குமென்று நினைக்கிறார்கள். நீ மிகவுந் தரித்திரன். ஆகையால் உனக்குக் கொடுக்கப் பிரயத்தனம் பண்ணுகிறேன். சாஸ்திரமும் இப்படியே யிருக்கிறது: ஏழைக்கே கொடுக்கவேண்டும், செல்வ முள்ளவனுக்குக் கொடுக்கலாகாது. ஏனென்றால், மருந்து நோயாளிக்கு எப்படிக் குணங் கொடுக்குமோ அப்படி நோயில்லாதவனுக்குக் கொடுக்குமா? ஆதலால், நீ இந்த ஏரியிலேயே முழுகி வந்து காப்பை வாங்கிக்கொண்டு வீட்டுக்குப் போ" என்ற வுடனே, ஐயோ! பிராமணனுக்குப் பின்புத்தி

யாகையால்,அவன் புலியின் பேச்சை நம்பி ஸ்நானம் பண்ணுகிறதற்கு ஏரியி லிறங்கினவுடனே, உளையிற் புதைந்து காலைப் பிடுங்கிக்கொண்டு வரக்கூடாமற் றிகைத்தான். புலி அதைப் பார்த்து, "பிராமணா! பயப்படாதே, நான் உன்னைச் சேற்றினின்றும் எடுக்கிறேன், சற்றிரு" என்று சொல்லிக்கொண்டு மெல்லெனப்போய் அவனைப் பிடித்துக்கொண்டது. அப்போது பிராமணன் எண்ணுவான்: துஷ்டர்கள் வேதாத்தியயனம் பண்ணியிருந்தாலும் தருமசாஸ்திரம் படித்திருந்தாலும் அவர்கள் வார்த்தையில் நம்பிக்கை வைக்கலாகாது; ஏனென்றால் எவன் சுபாவம் எப்படியோ அஃது எப்போதும் போகாது; இப்படி யிருக்கையில் நம்முடைய சாதிக்கு இயல்பாயிருக்கிற பேராசையினால் இந்தத் துஷ்டனிடத்தில் விசுவாசம் வைத்து மோசம் போனேன். இப்படிப் பச்சாத்தாபப் பட்டுக்கொண் டிருக்கையில் அந்தப் புலி அவனைக் கொன்று தின்றது. ஆகையால், மிகவும் ஆலோசனை பண்ணி ஏதொன்று செய்யத்தக்கதோ அதைச் செய்யவேண்டும். அப்படிச் செய்தால் யாதொரு தீங்கும் நேரிடாது' என்றிப்படிச் சொன்ன வார்த்தையைக்கேட்டு ஒரு புறா கர்வத்தோடு, 'இப்படி ஆலோசித்தால் ஓர் இரையும் நமக்கு அகப்படாது. மேலும், வெட்கப்படுகிறவன், பொறுமை யுள்ளவன், சந்தோஷப்படாதவன், குரோதமுள்ளவன், தீராச் சந்தேக முள்ளவன், பிறர் பொருளாற் சீவிக்கிறவன், இந்த ஆறுபேரும் துக்கத்தையே யனுபவிப்பார்கள்' என, இதைக் கேட்டுப் புறாக்களெல்லாம் தானியத்தைத் தின்னும் பொருட்டுப் போய் நிலத்தி லிறங்கி வலையில் அகப்பட்டன. புறாவரசு அதைப் பார்த்து, 'எல்லாரும் என் சொல்

லேக் கேளாமற் போனார்கள் ; இப்போது நான் ஒன்றி யாயிருந்து பலனில்லை' என்று சொல்லி அதுவும் வலை யில் வந்து அகப்பட்டது.

வேடன் பக்ஷிகள் வலையிற் சிக்கிக்கொண்டதைப் பார்த்து அதனிடத்திற்கு வரத் தொடங்கினன். அதைப் புறுக்கள் கண்டு, சித்திரக்கிரீவனைப் பார்த்து, 'நாங்கள் நீசன் புத்தியைக் கேட்டு உன்னை அவமானம் பண்ணி னேம் ; அதன் பலன் பிராப்தியாயிற்று' என, அப் போது சித்திரக்கிரீவன் 'இப்போது இதைச் சொல்லிப் பயனென்ன? இதற்கு ஓர் உபாய மிருக்கிறது. எல் லோரும் வலையோடுகூட ஒருமிக்கப் பறந்து வேறிடத் திற்குப் போகவேண்டும் ; அப்படிச் செய்தாற்றன் பிராணனைக் காப்பாற்றலாம்' என, இதைக் கேட்ட வுடனே எல்லாப் பறவைகளும் வலையோடுகூடச் சடிதி யிற் பறந்துபோயின. அதை வேடன் தூரத்திலிருந்து பார்த்து ஆச்சரியப்பட்டு, இவைகள் ஒரே மனதாய் வலையைக் கொண்டுபோயின, ஆயினும் இவைகளுள் ஒன்றுக்கொன்று சண்டை நேரிடும், அப்போது என் கையில் அகப்படும் என நினைத்துக்கொண்டு அவைகளின் பின்னே யோடும்போது புறுக்கள் கண்ணுக்கு எட்டாமல் மறைந்து போய்விட்டன. பிறகு அவன் வருத்தப் பட்டுத் திரும்பி வந்துவிட்டான். இவ்வாச்சரிய மெல் லாம் பார்த்திருந்த லகுபதன னென்னுங் காகம் அந்தப் புறுக்களின் பின்னே போயிற்று. கபோதராஜா தன் கூட்டத்தைப் பார்த்து, 'கண்டகிநதி தீரத்திலிருக் குஞ் சித்திரவனத்தில் என் சிநேகிதனை இரணியக னென்னும் எலியரச னொருவ னிருக்கிறன் அவன்

பல்லினாலே நம்முடைய வலையை யறுப்பான். ஆகை யால் அங்கே நடவுங்கள்' என, இதைக் கேட்டு அவை அப்படியே எலியரசன் வளையண்டை போயிறங்கின.

அப்போது, ஏதாவது ஆபத்து நேரிடு மென்பதைக் குறித்துத் தன் வளைக்கு நூறு வழி செய்துகொண்டு உள் ளேயிருந்த எலியரசன் புறாக்கள் இறங்கின சப்தத்தைக் கேட்டுப் பயந்து அடங்கியிருக்கையில், சித்திரக்கிரீவன் 'சிநேகிதா! இரணியகனே! எங்களோடே ஏன் பேச வில்லை?' என, இரணியகன் இதைத் தன் சிநேகிதனுடைய தீங்குர லென்றறிந்து சந்தோஷத்தோடுகூடச் சீக்கிரமாக வளையினின்றும் வந்து, 'நான் புண்ணியவா னாகையாற் சித்திரக்கிரீவன் என்னும் மித்திரன் என் வீட்டுக்கு வந்தான். இவ்வுலகத்தில் மனமொத்த மித்திரனோடு சம்பாஷிப்பதிலும் வேறே ஆனந்த மேது?' என்று உபசாரஞ் சொல்லிப் பிறகு அதனுடைய அவஸ்தை யைப் பார்த்து மிகவும் துக்கித்து, 'மித்திரா! நீ எல்லா ரைக்காட்டிலுஞ் சமர்த்தனல்லவோ, உனக்கு இப்படிப் பட்ட காரியம் எப்படி நேரிட்டது?' என, புறா 'எந்தக் காலத்தில் எது நடக்குமோ அது நடக்கும்! விதி வலிது. அதன்முன் யாருடைய உபாயம் நடக்கும்! கடல் பெருகி மேலிட்டால் அதற்குக் கரையேது!' என, இரணியகன் 'இந்தப் பேச்சு மெய்யே, நூறுநாழிகை வழித்தூரத்திலிருந்து வஸ்துக்களைத் தெரிந்துகொண்டு போகிற நீ இன்லறைக்கு வேடன் வலையைப் பாராமற் சிக்கிக்கொண்டையே பார்! சந்திர சூரியர்களுக்கு ராகு கேதுக்களாற் பீடை வருதலும், யானையும் பறவையும் பாம்புங் கட்டுப்படுதலும், புத்திசாலிகளுக்கு வறுமை

வருதலுந் தெய்வத்தின் மகிமையே யல்லாமல் வேறல்ல என்று சொல்லிச் சித்திரக்கிரீவன் கட்டுண் டிருந்த வலைக்கயிற்றை யறுக்கத் தொடங்கிற்று. அப்போது சித்திரக்கிரீவன் 'மித்திரா! முன்னே என் பரிவாரத்தினுடைய கயிற்றை யறு, பிறகு என் பாசத்தைத் துணி' என, அதைக் கேட்டு எலி 'என் பல் மிகவும் மெதுவானது, அதற்குப் பலமுங் கொஞ்சம், ஆகையால் இத்தனை பெயருடைய பந்தனைகள் எனக்கு எப்படி யறுபடும்? உன் தளையை யறுத்துப் பின் என் சாமர்த்தியத்துக்குத் தக்கபடி அவர்களுடைய தளையையும் அறுப்பேன்' என, சித்திரக்கிரீவன் 'நல்லது, முன்னே இவர்களுடைய பாசத்தை அறு' என, இரணியகன் 'தன்னைக் காப்பாற்றிக் கொண்டு தன் பரிவாரங்களைக் காப்பாற்றவேண்டும்; ஏனென்றால், அறம் பொருள் இன்பம் வீடாகிய இவைகளுக்குப் பிராணன் முக்கிய சாதனம்; ஆகையால் அதைக் காப்பாற்றினால் எல்லாவற்றையுங் காப்பாற்றினாற்போ லாகிறது' என, சித்திரக்கிரீவன் 'இந்த நீதி சரிதான்; ஆயினும், இப்படிப்பட்ட வேதனையினின்றும் பாலனம் பண்ணுகிறதற் கல்லவோ என்னை இவர்கள் ராஜாவாக நினைக்கிறார்கள்! ஆகையால் என் பிராணனிடத்தில் இச்சையைவிட்டு இவர்களைப் பிழைப்பி' என, அதைக் கேட்டு எலி 'நீ பரம சாது, அடுத்தவர்களை ஆதரிக்கிறவனா யிருக்கிறாய். எசமானனிடத்தில் விசுவாசமா யிருக்கிற சேவகனும், சேவகனிடத்திற் பிரீதியா யிருக்கிற எசமானனுஞ் சுகமடைவார்கள்' என்று சொல்லி, எல்லாவற்றின் பாசங்களையும் அறுத்துப் பின்பு சித்திரக்கிரீவனுடைய கட்டைச் சேதித்தது. பிறகு ஒன்றுக்கொன்று தழுவிக்கொண்டு பிரிய

வார்த்தைகள் சொல்லின. சித்திரக்கிரீவன் பரிவாரத் தோடுகூடத் தன்னிடத்திற்குப் போயிற்று. லகுபத னன் என்னுங் காகம் இவையெல்லாம் பார்த்து ஆச்சரி யப்பட்டு இரணியகனை நோக்கி, ‘ நீ பாக்கியவானு யிருக் கிறாய் ; ஆகையால் நானும் உன் சிநேகத்தை விரும்பு கிறேன், நீ தயை செய்து எனக்குச் சிநேகிதனாக வேண் டும் ’ என, அப்போது இரணியகன் ‘ நீ யார் ?’ என, காகம் ‘ நான் லகுபதன னென்கிற காக்கை ’ என, அதைக் கேட்டு எலி ‘ ஆனால் உனக்கும் எனக்கும் வெகுதூரம் ; உலகத்திற் சமானஸ்தர்களுக் குள்ளேயே சிநேக முண்டாகிறது ; நான் உனக்கு இரை, நீ என் னைத் தின்கிறவன்; இப்படி இருக்கையில் இஃது எப்படி யாகும்? ஆபத்துக்கே முகாந்தரமாம். நரியின் சிநேகத் தினால் ஒரு மான் வலையில் அகப்பட்டதுபோல் உன் னால் எனக்குப் பொல்லாங்கு நேரிடும் ’ என, லகுபத னன் அதைக் கேட்டு, மான் எப்படி வலையிற் சிக்கிக் கொண்டது ? ’ என, எலி சொல்லும் :

## கதை - 2

மகததேசத்தில் சண்பக வனத்தில் மானுங் காக மும் ஒன்றுக் கொன்று நட்பா யிருந்தன. அப்படி யிருக்கையில் அந்த மான் மனதின்படி புல் முதலான வைகளை மேய்ந்து கொழுத்திருக்கிறதை ஒரு நரி பார்த் துத் தனக்குள்ளே ஆலோசித்து, இவன் நமக்கு அசாத் தியனு யிருக்கிறான், ஆகையால் இவனை வஞ்சனையாற் கொல்லவேண்டுமென் றிப்படி நிச்சயித்து அதன் சமீ பத்திற் போய், “ சிநேகிதா ! சுகமா ? ” என, அதைக் கேட்டு மான் “ நீ யார் ? ” என, நரி “ நான் க்ஷுத்திர

புத்தி யென்கிற நரி, இந்தக் காட்டில் யாருமற்ற பாவி யாய் ஒருவனாகத் திரிந்துகொண்டிருந்தேன்; இன்றைக்கு உன்னைப் பார்த்து மிகுந்த சந்தோஷத்தை யடைந் தேன்; இப்போது உனக்கு வேலை செய்துகொண்டு உன்னிடத்திலிருக்க இச்சிக்கிறேன்" என, இதைக் கேட்டு மான் "நல்லது" என்றது. பிறகு பொழுது போனவுடனே இரண்டுஞ் சண்பக மரத்தின் கீழே வந்தன. அம் மரத்தின்மேல் வாசம் பண்ணிக் கொண் டிருந்த மானின் சினேகிதனாகிய சுபுத்தி என்னுங் காகம் இவ்விரண்டையும் பார்த்து, மானை நோக்கி, "ஓ மித் திரா! உன்னண்டையி லிருக்கிறவன் யார்?" எனக் கேட்க, மான் "இந்தச் சம்புகன் என்னுடனே சிநேகித் திருப்பே னென்கிறான்" என, அப்போது காகம் "மித் திரனே! சடிதியில் வந்த பழக்க மில்லாதவனை நம்ப லாகாது. ஒருவன் குலமும் நடத்தையுந் தெரியாமல் அவனுக் கிடங் கொடுத்தால் ஒரு பூனைக்குச் சரற்கவ னென்னுங் கழுகு இடங்கொடுத்து இறந்தாற்போல் நேரிடும்" என, அதைக் கேட்டு மான் "சரற்கவன் எப்படிச் செத்தான்?" என, காகஞ் சொல்லும்:

## கதை - 3

"பாகீரதி தீரத்தில் திரிகூட மென்னும் மலையில் ஒரு முதிய இத்திமரத்தின் பொந்தில் வாசம் பண்ணிக் கொண்டிருந்த நகமுங் கண்ணு மில்லாத சரற்கவ னென் னும் ஒரு கிழக் கழுகானது மற்றைப் பக்ஷிகள் தன்னிட த்தில் இரக்கம் வைத்துத் தங்கள் ஆகாரத்திற் கொஞ்சங் கொஞ்சம் நெருக்கிக் கொடுக்கத் தின்றுகொண்டு ஜீவித் திருக்கையில், ஒருநாள் நெடுஞ்செவியன் என்னும் பூனை

பறவைகளுடைய குஞ்சுகளைத் தின்னவேண்டி அந்த மரத்தின்கீழே வர, அதைக் குஞ்சுகள் பார்த்துப் பயந்து பெருங்கூச்ச லிட்டன. கழுகு அதைக் கேட்டு, ' நீங்கள் ஏன் பயப்படுகிறீர்கள்? இங்கே எவன் வந்தான்?' என, இதற்குள்ளே பூனை சரற்கவனைப் பார்த்து நான் செத் தேனெனப் பயப்பட்டு, உடனே மனதிற் றைரியம் பண் ணிக்கொண்டு, இந்தச் சத்துருவைத் தப்பித்துக்கொண் டோடுகிறதற்கு நமக்குச் சக்தியில்லை; ஆகையால், இவன் சமீபத்திற் போகவேண்டும்; பின்னர் எஃது உண் டாகுமோ அஃது உண்டாகட்டும் என் றிப்படி நிச்ச யித்து அந்தக் கழுகின் அருகிற் போய், ' சமர்த்தனே உனக்கு வந்தனம் பண்ணுகிறேன்' என

கழுகு: அதைக் கேட்டு, 'நீயார்?' என, அப்போது,

பூனை: 'நெடுஞ்செவிய னென்னும் பூனை' என,

சரற்கவன்: ' நீ சீக்கிரமாய் இவ்விடம்விட் டோடிப்போ, இல்லாவிட்டாற் சாவாய்' என

பூனை: ' நான் என் விருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன், அதைக் கேள்; பிறகு, கொல்லல் தக்கதாறு கொல்லு; ஜாதி பேதத்தினாலேயே பிராணிகளைக் கொல் லுவதாவது பூசிப்பதாவது யோக்கியமன்று; ஆதலால், அவனவன் நடத்தையைப் பார்த்து எது செய்யத்தக்க தோ அதைச் செய்யவேண்டும்' என,

கழுகு: இதைக் கேட்டுப் பூனையைப் பார்த்து, ' நீ ஏன் வந்தாய்? சொல்' என

பூனை: 'நான் கங்காதீரத்தில் நித்திய ஸ்நானம்பண் ணிச் சாந்திராயண முதலாகிய விரதங்கள் ஆசரித்துக்

கொண் டிருக்கிறேன். நீ மிகவுந் தருமவானு யிருக்கிறு யென்று பக்ஷிகளால் எப்போதுங் கேள்விப்படுகிறதனுல் நான் உன்னிடத்திற்கு வந்தேன்; ஏனென்றல், வயதின் முதிர்ந்த வித்துவானிடத்திலே தருமங் கேட்கவேண்டு மென்று சாஸ்திர மிருக்கிறது. ஆனுல் நீ தர்மத்தை விட்டு என்னைக் கொல்லத் துணிந்தாய்; இப்படி இல் லறத்தாருடைய ஆசாரம் நான் எங்கும் பார்த்ததில்லை. சத்துருவுந் தங்கள் வீட்டிக்கு வந்தாற் சாதுக்கள் அவனுக் குச் சம்மானம் பண்ணுவார்கள். மரம் தன்னை வெட்டு கிறவனுக்கு நிழல் கொடுக்கவில்லையா? மேலும், சாதுக் கள் தங்கள் வீட்டுக்கு எவன் வந்தாலும் பூசிக்கிறுர்கள்; குறை வொன்றும் பண்ணுகிறதில்லை. அதிதி யாரு டைய வீட்டுக்கு வந்து முகம் வாடிப் போகிறுனே அவன் தன் பாவத்தை அவ்வீட் டெசமானனுக்குக் கொடுத்து இவன் புண்ணியத்தைக் கைக்கொண்டு போகிறு னகையால் சாதுக்கள் எல்லாரிடத்திலுந் தயை செய்கிறுர்கள். சந்திரன் சண்டாளன் வீட்டிலும் பிர காசிக்கிறுன் என,

கழுகு: இதைக் கேட்டு, 'பூனை இறைச்சிகளைத் தின்கிறது, மேலுங் கொலை செய்கிறது என்று நினைத்து இப்படி நான் சொன்னேன் என

நெடுஞ்செவியன்: அதைக் கேட்டு, பூமியைத் தொட டுச் சிவ சிவ வென்று உச்சரித்துக் காதின்மேற் கையை வைத்து, 'நான் தரும சாஸ்திரங்கள் கேட்டு மிகுந்த வைராக்கியமடைந்து பொல்லாத கருமங்களை யெல்லாம் விட்டு விட்டேன். ஏனென்றல், கொலை செய்வதுபோல வேறொரு பாதக மில்லையென்று அநேக சாஸ்திரங்களிற்

சொல்லி யிருக்கின்றது. எவர்கள் மற்றொருவனைக் கொன்று தாங்கள் சுகமடைய விரும்புகிறார்களோ அவர்கள் நரகத்தை யடைகிறார்கள். ஆகையாற் கொலைசெய்யாம விருப்பதுபோல வேறொரு தரும மில்லையென்று நினைத்துக் காட்டி லிருந்துகொண்டு காய் கனி கிழங்குகளைச் சாப்பிடுகிறவர்கள் பாதக மெப்படிப் பண்ணுவார்கள்!'' என்று சொல்லிக் கழுகுக்கு நம்பிக்கை வரப் பண்ணி அதன் வீட்டிலிருந்தது.

பிறகு அந்த ருத்திராக்ஷப் பூனை பக்ஷிகளின் குஞ்சுகளை நாடோறும் அங்கே கொண்டுவந்து தின்று கொண்டிருக்கத் தலைப்பட்டது. அப்போது குஞ்சிழந்த பறவைகளெல்லாம் கிலேசப்பட்டு ஒன்றாய்க் கூடித் தங்கள் குஞ்சுகளைச் சோதிக்கத் தொடங்கின. பூனை இதை யறிந்து அவ்விடம்விட் டோடிப்போயிற்று. அந்தப் பக்ஷிகள் அங்கங்கே பார்த்துக்கொண்டே கழுகின் பொந்தண்டை வந்து பார்க்கையில், அந்தக் குஞ்சுகளுடைய எலும்புகளும் சிறகுகளும் விழுந்து கிடக்கக் கண்டு, நம்முடைய குஞ்சுகளை இந்தத் துரோகிக் கழுகே பக்ஷித்ததென்று நிச்சயித்து, அந்தக் கழுகைக் கொத்திக் கொன்றன. ஆகையால் ஒருவனுடைய குணந் தெரியாமல் அவனுக்கு இடங்கொடுக்க லாகாது'' என, அப்போது நரி, "உன் சுபாவம் இவனுக்குச் சிநேகிக்கிறதற்கு முன்னே தெரியுமா! ஆகையால் நல்லோர்களுக்குச் சுபாவத்தினாலே காரியமில்லை; அவர்களுடைய சிநேகம் கண்ட மாத்திரத்திலேயே யாகிறது" என, மான் அதைக் கேட்டுக் காகத்தைப் பார்த்து, "எப்படி நீ எனக்கு மித்திரனோ அப்படியே இவனு மிருக்கட்டும். நீ

ஒ "ந் 'தடை சொல்லாதே" என்று சொல்லி நரி ஸை. தன்னிடத்தில் வைத்துக்கொண்டது. பிறகு மூன்றும் தங்கள் மார்க்கத்தின்படி வயிற்றை நிரப்பிக் கொண்டு ராத்திரிக்கு அந்த விடத்தில் வந்துகொண் டிருந்தன.

இப்படியிருக்கையில் ஒருநாள் நரி மானைப் பார்த்து, "மித்திரா! இந்தக் காட்டில் ஓரிடத்தில் இளவிள வென்று நேர்த்தியான பயிரிருக்கிறது. அதை உனக்குக் காண் பிக்கிறேன் வா" என்று சொல்லி, அதை யிட்டுக்கொண்டு போய்க் காட்டிற்று. அன்று முதலாய் அந்த மான் போய்த் தினமானம் பயிரை மேய்ந்துகொண் டிருக்கை யில் அதைக் கொல்லைக்காரன் பார்த்து அங்கே வலை கட்டினான். பின்பு மான் அங்கே வழக்கப்படி மேயப் போய் அதிற் சிக்கிக்கொண்டு, இப்போது என்னை மித் திரனைத் தவிர யாவன் விடுவிப்பானென்று மனதி லெண் ணிக்கொண் டிருக்கையில், அங்கே நரி வந்து, என் னுடைய மனோரதம் நிறைவேறிற்று, இப்போது நான் இதன் எலும்பையும் மாம்சத்தையும் நிரம்பத் தின்னுவே னென்று வாயூற மனதி லெண்ணிக்கொண்டு சும்மா விருந்தது. அதைக் கண்டு மான் "மித்திரா! ஏன் சும்மா விருக்கிறாய்? என்னுடைய தளையைச் சீக்கிர மாக அறுத்து என்னை விடுவி, சங்கட காலத்திற் சிநே கிதர்கள் உடை யிழந்தவன் கைபோல் உதவுகிறார்கள்" என, சம்புகன் "ஆம், நீ சொல்வதெல்லாம் மெய்யே, ஆயினும் எனக்கு இன்றைக்கு விரத தின மாகையால் இந்தத் தோல் வலையைத் தீண்டமாட்டேன்; நாளைக்கு என்ன சொன்னாலுங் கேட்பேன்; சிநேகிதனுக்காக நான்

பிராணனை விடத்தக்கவன்" என்று சொல்லி, அதன் கண்ணுக்குத் தப்பித்துக்கொண்டு அங்கே ஓரிடத்தில் ஒளித்துக்கொண் டிருந்தது. காகம் இராத்திரிக்கு மான் வரவில்லை யென்று அதைத் தேடும்பொருட்டு இங்கு மங்குந் திரிந்துகொண்டு அங்கே வருகையில் அந்த மானின் அவஸ்தையைப் பார்த்து, "சிநேகிதா! உனக்கு இந்த அவஸ்தை இப்படி ஏன் வந்தது?" என, மான் "இஃது உன் வார்த்தையைக் கேளாமையால் வந்த பலன்" என, காகம் "உன் கூட்டாளியான சம்புகன் எங்கே போனான்?" என, மான் "என்னுடைய இறைச்சியைத் தின்பதற்காக இங்கேதான் ஒளித்துக்கொண் டிருப்பான்" என, அதைக் கேட்டுக் காகம் "தனக்கு இதம் பண்ணுகிற மித்திரன் பேச்சைக் கேளாதவனுக்கு விபத்து சீக்கிரமாக வரும். பின்னும், அவன் சத்துருவுக்குச் சந்தோஷம் வருவிக்கிறான்" எனச் சொல்லிக் கொண் டிருக்கையில், கொல்லைக்காரன் கையில் ஒரு தடியை யெடுத்துக்கொண்டு வர, அவனைப் பார்த்துக் காகம் மானோடு "மித்திரா! நீ இப்போது மூச்சை யடக்கிக் கொண்டு செத்தவனைப்போலக் கிடந்தால் அவன் உன்னைப் பார்த்து நீ செத்தாயென் றெண்ணிக் கொண்டு கட்டிய வலையை அவிழ்த்துச் சுருட்டி வேறோரிடத்தில் வைக்கப் போவான், அப்போது நான் கத்துகிறேன், அதைக் கேட்ட மாத்திரத்தில் நீ மிகவும் விரைவாய் ஓட்டம் பிடி" என்று சொல்லித் தான் அப்படியே பொய்யாக மானின் கண்ணைக் குத்திக்கொண் டிருந்தது. இதற்குள்ளே வந்த கொல்லைக்காரன் மானைப் பார்த்துச் செத்ததென் றெண்ணிக் கட்டியிருந்த வலையை யவிழ்த்து ஓரிடத்தி லொன்றாகக் கட்டி வைக்கப்

போனான். காகம் அதைப் பார்த்துச் சங்கேதப்படி கத்த, மான் அதைக் கேட்டவுடனே ஓட்டம் பிடித்தது. அதைக் கொல்ல நினைத்து அந்தக் குடியானவன் தடியை விசிறி யெறிய, அது பதிவிருந்த நரிமேற் பட, நரி உடனே இறந்தது. ஆகையால் புண்ணியமாவது பாவமாவது மிகுதியானால் அதன் பலன் உடனே யுண்டாகிறது என்று சொல்லிப் பின்னும் எலி 'இப்படி மானுக்கு நரியின் சினேகம்போல் உன் உறவு உபயோகமன்று' என, காகம் 'உன்னைத் தின்றால் எனக்குப் போதுமா? நீ பிழைத்திருந்தால் நான் சித்திரக்கிரீவனைப்போலச் சுகமடைவேனென்று உன் நட்பை விரும்புகிறேன்' என, பின்னும் இரணியகன், 'நீ எனக்குப் பகைவன்; உன்னுடனே நான் சிநேகம் பண்ணுகிறதில்லை. சத்துரு தனக்கு அனுகூலமாயிருந்தாலும் அவனோடே சிநேகிக்க லாகாது; தண்ணீர் வெந்நீரானாலும் நெருப்பை யவிக்கும். ஆகையால், எது தக்கதோ அதைச் செய்யவேண்டும். தண்ணீரில் வண்டியும் பூமியின்மேற் கப்பலும் நடக்குமா? இதனாற் சத்துருக்களிடத்தில் நம்பிக்கை வைக்கலாகாது' என்றிப்படிப் பல விதமாகச் சொல்ல, காகம் 'நான் உன்னுடனே சிநேகிப்பேன், இல்லாவிட்டாற் பட்டினியாக விருந்து இங்கேயே பிராணனை விடுவேன். நெருப்பின் வெப்பத்தினாற் பொன் முதலானவை உருகி யொன்றாகின்றன. யாதேனுமொரு நிமித்தத்தினாலே விலங்கு பறவைகள் மித்திரத்துவத்தை யடைகின்றன. பயத்தினா லாகிலும் யாதோ ராசையினா லாகிலும் மூடர்களுக்குச் சிநேகமுண்டாகிறது. ஆனால் சாதுக்களுடைய சிநேகமோ கண்ட மாத்திரத்தில் உண்டாகிறது. மண்பானை சீக்கிரமா

புடைகிறது, பிறகு பொருந்துகிறதில்லை; பொன் குடஞ் சீக்கிரத்தி லுடையாது, உடைந்தாலு மொன்றும்; இப்படியே துர்ச்சன சற்சனர்களுடைய சிநேகமு மிருக்கிறது' என, இதைக் கேட்டு இரணியகன் 'உன் வார்த்தையால் நான் சந்தோஷ மடைந்தேன். இப்போது உனக்கும் எனக்குஞ் சிநேகமிருக்கட்டும். இனிமேல் நாமிருவரும் ஒருமனதா யிருக்கவேண்டும். உபகாரம் பண்ணுகிறவன் மித்திரனென்றும் அபகாரம் பண்ணுகிறவன் சத்துருவென்றும் அறிந்து மனக்களங்க மில்லாமல் நடக்கவேண்டும்' என்றிப்படிப் பேசி நிச்சயித்தபின், இரணியகன் லகுபதனனுக்குச் சிறிது ஆகாரங்கொடுத்துத் தன் வளையிற் போயிற்று. சிநேகலாபம் பெற்ற காகமும் அதனிடத்திற் செலவு பெற்றுக்கொண்டு தன்னிடத்திற்குப் போயிற்று.

அதுமுதலாய் இவைகள் அத்தியந்த சிநேகமாய் ஒன்றுக் கொன்று ஆகாரங் கொடுத்துக் கொண்டு பலபல வார்த்தைகள் பேசிக்கொண் டிருக்கையில் ஒரு நாள், லகுபதனன் எலியைப் பார்த்து, 'மித்திரா! இப்போது இங்கே இரை யகப்படாமையால் வேறோரிடத்திற்குப் போக இச்சிக்கிறேன்' என, அதைக் கேட்டு இரணியகன் 'எங்கே போகிறாய்?' என, அப்போது அது 'தண்டகாரணியத்தில் கர்ப்பூர கௌர மென்னுந் தடாகத்தி லிருக்கிற ஆமையாகிய மந்தர னென்பவன் எனக்குச் சிநேகிதனா யிருக்கிறான். அவன் எனக்கு விதம் விதமான மீன்களைக் கொடுத்துப் போஷிப்பான், அதைக் குறித்து நான் அவனிடத்திற்குத் போகிறேன்' என, அதைக் கேட்டு, இரணியகன் 'மித்

திரா! அவ்விடத்துக்கு என்னையுங் கொண்டுபோக வேண்டும். நான் தேசாந்தரம் போக விரும்புகிறேன்' என, அப்போது காக்கை 'நீ அப்படி விரும்புவானேன்?' என, இரணியகன் 'அங்கே போனபின்பு சொல்வேன்' என, லகுபதனன் இரணியகனை யெடுத்துக்கொண்டு அந்த விடத்துக்குப் போயிற்று. அவைகளைப் பார்த்து மந்தரன் சந்தோஷித்து அவ் விரண்டுக்கும் ஆதித்தியம் பண்ணிற்று. அப்போது லகுபதனன் மந்தரனைப் பார்த்து, 'இந்த இரணியகன் மிகவும் பரோபகாரி; இவன் சித்திரக்கிரீவனை அவன் கூட்டத்தோடுகூட வலையினின்றும் விடுவித்தான்; அப்போது இவன் நட்பு நிலைமையைப் பார்த்து நானும் இவனுடனே நட்புக் கொண்டேன்' என, அதைக் கேட்டுக் கூர்மம் சந்தோஷப்பட்டு இரணியகனைப் பார்த்து, 'மித்திரா! நீ இந்த மனிதசஞ்சாரமில்லாக் காட்டில் வருவானேன்?' என அப்போது எலி சொல்லும்:

'சம்பகாவதி யென்னும் பட்டணத்தில் சூடாகர்ண னென்னுஞ் சந்நியாசி யொருவன், உண்டு மிகுந்த சோற்றைக் கப்பரையிற்போட்டு உறியின்மேல் வைத்துவிட்டு நித்திரை பண்ணிக்கொண் டிருப்பான். அந்தச் சோற்றை நான் தின்றுகொண்டு சுகமாயிருக்கிற நாளில் அங்கே வீணாகர்ண னென்னு மொரு சந்நியாசி வந்து அவனோடுகூட அநேக கதாப் பிரசங்கம் பண்ணிக் கொண்டிருக்கையில், அந்தச் சூடாகர்ணன் கையி லொரு தடியினாலே பூமியைத் தட்டிக்கொண்டு சோற்றைக் காப்பாற்றிக்கொண் டிருந்தான். அப்போது வீணாகர்ணன் "என்னுடைய கதையை அநாதரவு

பண்ணி நடுவே வேறே என்ன வியாபாரத்தி லிருக்கிறாய்?" என, சூடாகர்ணன் "உன் வார்த்தையை அநாதரவு பண்ணவில்லை. ஆனால் இவ்வெலி என் பாத்திரத்திலிருக்கிற அன்னத்தை நாடோறுந் தின்னுகிறது; அதை யோட்டுகிறேன்" என, வீணாகர்ணன் அப்போது உறியைப் பார்த்து, "கொஞ்ச பலமுள்ள இந்த எலி இவ்வளவு உயரம் எப்படிக் குதிக்கிறது? ஆகையால் இதற்கு ஏதோ ஒரு காரண மிருக்க வேண்டும், அது தான் எதுவா யிருக்கலாமென் றுலோசித்துப் பார்த்தால் இங்கே யிருந்த திரவிய மிருக்கவேண்டும்; உலகத்தில் திரவியமுள்ளவர்கள் பலமுள்ளவர்களா யிருக்கிறார்கள்; அசாத்தியமான காரியங்களைச் சாதிக்கிறார்கள்; ராஜத்துவத்துக்கும் இது காரணமாகும்; எல்லாம் இதனாலாகின்றன" என்று சொல்ல, அந்தச் சந்நியாசி இதைக் கேட்டு மெய்தானென்று நம்பிப் பூமியை வெட்டி, ஐயோ! என் திரவியத்தை யெடுத்துக் கொண்டான் அன்று தொடங்கி நான் இளைத்துப் போனேன் பின்பு எனக்கு இரையுங் கிடையாததனால் மெள்ள மெள்ள நடந்துகொண் டிருக்கையில் அந்தச் சந்நியாசி பார்த்து, "பார்! இந்த எலி இப்போது தன்னுடைய சாதித்தன்மையை யடைந்திருக்கிறது. முன்னிருந்த தன மதம் போய் விட்டது. ஆகையால் பணமில்லாதவர்களை எல்லோரும் அற்பமாய் நினைக்கிறார்கள்" என்றான். இதைக் கேட்டு நான், இப்போது இங்கே யிருப்பது சரியன்று, இதை வேறொருவரோடுஞ் சொல்லலாகாது; பொருளிழவுங் கிருகச்சித்திரமுந் தானமும் மானமும் ஆயுளுந் தனமுமாகிய இவைகளைப் புத்திமான் வெளிப்படுத்தலாகாது; தன் விதி பிரதி

விஸ்தரித்துச் சொல்லுவதென்ன? என் குடிப்பிறப்பு பிரபுவுக்குச் சகவாசத்தால் வரவரத் தெரியும்' என, அப்போது குரூரநாசன், 'இப்போது கோட்டான் குலமெல்லாம் ராஜன் குற்றத்தாற் பாழாகும். பிறர் குற்றங்களை அரசனுக்கு அறிவிக்கவேண்டும், அரசன் இதத்தைக் கேளாவிடில் அதற்கென்ன வுபாய மிருக்கின்றது?' என்றிங்ஙனஞ் சொல்ல, அரசன் அதைக் கேளாமல் சிரஞ்சீவியைத் தன் அரணிற் கொண்டுபோய் வைக்க, பின்னர்ச் சிரஞ்சீவி, நம்மைக் கொல்லவேண்டு மென்றவன் எல்லாரிலுங் கெட்டிக்காரன், மேலும் எசமானனுக்கு நன்மையே செய்பவன், மற்றவர்கள் எசமானனைப் போல மூடர்க ளாகையால் அவனொருவன் இல்லாவிடில் இவர்களை வெல்வது அருமையன்று என்றிப்படி மனதுக்குள் குதூகலத்துடனே யாலோசித்துக்கொண்டிருக்கையில், அரிமர்த்தனன் காரியகாரர்களைப் பார்த்து, 'இச் சிரஞ்சீவிக்குத் தூர்க்கமெல்லாங் காட்டுங்கள்' என, சிரஞ்சீவி அப்படியே ராஜ கட்டளையின்படி யெல்லாம் பார்த்து, நாம் இதற்குள் இருந்தால் நமதெண்ணம் முடியாது, பின்னும் நம்முடைய வஞ்சனைகளையுந் தெரிந்துகொள்வார்கள், ஆதலால் கோட்டைத் தலைவாசலி லிருந்து மனோபீஷ்டத்தை முடிக்க வேண்டும் என்று தனக்குள்ளே தீர்மானித்து, பிறகு அரசனை நோக்கி, 'மகாராஜனே! நான் வாயச மாதலால் உள்ளே யிருக்கத் தக்கவ னல்லன். உமது கடைவாசலிற் காத்திருந்து கபடமில்லாமற் சேவித்துக் காலந்தள்ளுவேன். அன்புள்ளவனும் மனதழுக் கில்லாதவனு மாகிய சேவகன் எங்கிருந்தாலுஞ் சிந்தையில்லை' என் றிவ்வண்ணஞ் சொல்லிக் காகம் அங்கேயே யிருந்தது.

அப்போது குரூரநாசன் 'ராஜா அமைச்சர் முத லிய நீவி ரெல்லீரும் மூர்க்கர்களா யிருக்கிறீர்களென் றெண்ணுகிறேன்; முற்காலத்தில் நடந்த ஒரு கதையு மிருக்கிறது; முதலாவது மூடன் நான், இரண்டாவது மூடன் வேடன், மூன்றாவது மூடன் அரசன், நான்கா வது மூடன் அமைச்சன் என்று சொல்லிவிட்டு ஒரு பறவை பறந்து போயிற்று' என, அப்போது அவர்கள் 'அஃது எப்படி?' எனக் குரூரநாசன் சொல்லும்:

## கதை - 8

'பொன்னாக எச்சமிடுகிற பறவையொன்று மலையின் மேல் நெடுநாளா யிருக்கையில், அங்கே ஒருநாட் போன வேடன் அது பொன்னாக மலவிசர்ச்சனம் பண்ணப் பார்த்து மிகவும் ஆச்சரியமாய், நான் பாலியமுதலாகத் திரிந்து வருகிற பல காடுகளிற் பார்த்த பல சாதிப் பறவைகளிலும் இப்படி யொன்றைப் பார்த்ததில்லை, ஆதலால் இதை உயிருடனே பிடித்துக்கொண்டு போவோமென் றெண்ணி மரத்தில் வலை கட்ட, அப் போது அப் பறவை வழக்கப்படி வந்து சடிதியில் அவ் வலையிற் சிக்கிற்று. வேடன் அதைக் கூட்டி லடைத்துத் தன் குடிசைக்குக் கொண்டுவந்து, இது நம்மிடத் திருப் பதை அரசனறிந்தால் இப் பறவையைக் கொண்டு போவது மன்றி நம்முயிரையும் வாங்குவான், ஆதலால் இக் குணநிதியை அரசனுக்குக் கொடுப்பபோ மென்று நிச்சயித்துப் பறவையைத் தந்து அரசனுடனே நடந்த செய்தியை விண்ணப்பம் பண்ண, அப்போது அவன் அதை இரத்தின மிழைத்த ஒரு கூட்டில் வைக்க, அதைப் பார்த்து மந்திரி "அசம்பாவிதமான இவ்

வேடன் பேச்சைக் கேட்டு இதை ஏன் வாங்கினீர்? விட்டுவிடும்" என, இதைக் கேட்டு அப் பறவையை மன்னவன் விட்டவுடனே அது ராஜன் மனைச் சிகரத்தி லுட்கார்ந்துகொண்டு, முன்னே நான் மூடன், இரண்டா வது வலைகாரன், மூன்றாவது ராஜன், நான்காவது மந்திரி என்றிப்படிச் சொல்லிப் பறந்து போய்விட்டது' என்று இச் சங்கதியைச் சொல்லிப் பின் இஷ்ட மித்திரர்களைப் பார்த்து, 'இன்றை வரைக்கும் இந்த ராஜாவின் சார்பி லிருந்தேன், இனி வேறொரு மலையைச் சார்ந்திருக்க வேண்டும். நரியானது குகையைப் பார்த்துக் கூப்பிட் டுச் சுகமடைந்தாற்போல வருவதற்குமுன் ஆலோசிக் கிறவன் இன்பமடைவான்' என, அப்போது அவைகள் அஃது எப்படி?' என, குரூரநாசன் சொல்லும்:

## கதை - 9

'ஒரு வனத்தில் வசித்திருந்த கரநகரனென்னுஞ் சிங்கம், ஒருநாள் இரைக்காக நெடுநேரந் திரிந்தும் யாதொன்றுங்கிடையாமையினால், போது போனவுடனே ஒரு பெருங் குகையைப் பார்த்து இதிலடைகிறதற்கு யாதேனுமொரு பிராணி வரும், அதைத் தின்று பசி யாறலா மென்று தனக்குள்ளே தீர்மானித்து அதில் ஒளித்துக்கொண் டிருக்கையில், அக் குகையில் வசிக்கிற அவிபுச்சனென்னும் நரி வந்து அங்கே சிங்கத்தின் காற் சுவடுகளைக் கண்டு சந்தேகித்து, சிங்கம் இதில் இருக்கிற தையு மில்லாததையுஞ் சோதித்துப் பின்பு உள்ளே புக வேண்டுமென் றெண்ணித் தூரத்தில் நின்றுகொண்டு, "ஓ குகையே! குகையே!" என்று இரண்டுதரங் கூவி யழைத்து, "குகாய்! நீ என்னோடு பேசாமலிருக்

கிறுயே என்ன? உனக்கு மெனக்கும் பிரதி தினமுஞ் சம்பாஷணை நடந்துகொண் டிருந்ததே, இன்றைக்கேன் நீ பேசவில்லை? விரைவாகச் சொல், இல்லாவிட்டால் நான் மற்றோரிடத்திற்குப் போய்விடுவேன்" என்று சொல்லி மீண்டுங் கூப்பிட்டது. அப்போது சிங்கம் இக் குகை நாடோறும் பேசிக்கொண்டிருக்கும், இன் றைக்கு நமது பயத்தினுல் அதனோடு பேசவில்லை, ஆனுல் இதற்குப் பதிலாக நாம் உத்தரங் கொடுப்போ மென் றுலோசித்து, பிரதித்தொனியினுல் அருகே யிருந்த பிராணிகளெல்லாந் திடுக்கிடும்படி அந் நரியைக் கூவ, நரி, அப்பா நான் பிழைத்தேனென்று வேறோரிடத் திற்கு ஓடிப்போய்விட்டது. ஆதலால், யாதொன்றை யும் முன்னே யாலோசித்துச் செய்யவேண்டும்' என்று தன் மித்திரர்கட்குச் சொல்லி அவர்களோடு குரூரநாச மந்திரி தேசாந்தரம் போயிற்று.

பின்னர்க் காக மந்திரி, இப்போழ்து கோட்டான் கூட்டத்தைக் கொல்வதற்கு வருத்த மில்லை; ஏனென் றுல், விவேக மில்லாத மந்திரியையுடைய அரசன் சீக் கிரத்திற்கெடுவான்; விவேகமுள்ள மந்திரி வஞ்சனையான மித்திரர்களைப் பகைவரென் றறிந்துகொள்வான்; இப் படி யறிகிறவன் இவனிடத்தில் இப்போது ஒருவனு மில்லை; ஆதலால் நங் குலத்தின் மங்களத்தைக் குறித்து யாதாயினும் பிரயத்தனஞ் செய்யவேண்டும் என்று மனதில் நிச்சயித்து, அன்று முதல் தினந்தினம் ஒவ் வொரு விறகு கொண்டுவந்து வழியண்டை போட் டுக்கொண்டே வர அது போராகக் குவிந்தது. சூரியனுதித்தவுடனே கோட்டான்க ளெல்லாங்

குருடுகொண் டிருக்கையில் விறகுகளையுஞ் சுள்ளிகளை யுங் குகையின் வழியில் குப்பலாகச் சேர்த்துவிட்டுத் தான் மெள்ள மேகவர்ணனிடத்திற்கு வந்தது. அப் போழ்து மேகவர்ண ராஜன் 'என்ன செய்தி?' என, சிரஞ்சிவி 'நான் பகைவர் குலவேரைப் பிடுங்கத்தக்க வுபாயஞ் செய்திருக்கிறேன். நீங்கள் ஒவ்வொருத்தர் ஒவ்வோர் எரிகொள்ளி விழுக்காடு கொண்டுவந்து என் சாகையின்மேற் போட்டால் கோட்டான்களெல்லா மிறக்கும்' என, இதைக் கேட்டுக் காக ராஜன் 'என்ன வுபாயஞ் செய்தாய்? சொல்' என, மந்திரி 'மகாராஜாவே! இது சொல்லத்தக்க சமயமன்று. ஏனென்றால், நான் சொல்லுகிற செய்தியைப் பகைவ ரறிந்து வேறோரிடத் திற்கு ஓடிப்போனால் நம்முடைய இத்தனை முயற்சியும் வீணாய்ப்போம்; மேலும், கடிதிற் செய்யத்தக்க காரி யத்தில் தாமசஞ் செய்யலாகாது' எனக் கேட்டுக் காக ராஜன் தன் பரிவாரத்தோடுகூட எரிகொள்ளிகளைக் கொ ண்டுவந்து உலூகங்க ளிருக்குங் குகைவழியிற் போட, அந்தப் புகையினால் அவை பயந்து கலக்கமுற்று இரைச்சலிட்டுக்கொண்டு வெளியே வர எத்தனிக்கை யில் வழி இல்லாமையால், அப்போது குரூரநாசன் சொன்னதை நினைத்துக்கொண்டு, அவன்வார்த்தையைக் கேளாமைக்குப் பலன் இதுதான் இதுதானென்று அழு குரலோடு சொல்லிக்கொண் டிருக்கையில், நெருப்புச் சுவாலை யதிகரிக்க அவை எரிந்திறந்தன.

பின்பு மேகவர்ண ராஜன் முன்விட்ட தன் மரத் திற் குடிபோய்ச் சுகமாக ராஜ்யத்தை யனுபவித்துக் கொண்டிருக்கையில் சிரஞ்சீவியைப் பார்த்து, '° பகை

யாளி வீட்டிலிருந்து எவ்வாறு காரியத்தை முடித்தாய்?' என, சிரஞ்சீவி 'குரூரநாசன் தவிர மற்றவர்க ளெல்லாரும் மூடராகையால், அவர்கள் அவன் புத்தியைக் கேளாமல் அவனை யவமானம் பண்ணி என்னைத் தங்கள் துர்க்கத்திற்கு இட்டுக்கொண்டு போனார்கள்; அதனால் அவன் தன் சிநேக பந்துக்களோடுகூட மறு தேயத்திற்குப் போனான். மற்றைக் கோட்டான்கள் மூடராகையால் எரிந்திறந்தார்கள். இவ்வாறே முன் ஒருகாலத்தில் சத்துரு நாசத்தின்பொருட்டு ஒரு கிருஷ்ண சர்ப்பம் தவளைகளைத் தோளிற் சுமந்து கெடுத்தது' என, அதைக் கேட்டுக் காக ராஜன் நகைத்து, 'பாம்பு தவளைகளைத் தோளிற் சுமந்து கொன்றவிதமென்ன? சொல்லும் ஐயா' என, சிரஞ்சீவி சொல்லும்:

## கதை - 10

ஒரு தேயத்தில் மந்தவிஷனென்னும் பாம்பு இரை கிடையாமல் மிகவும் பசித்து ஓர் ஏரிகரையண்டை வரும்போது அதிலே தவளைகள் நிரம்பி யிருப்பதைக் கண்டு, இங்கே யாதானுமொரு கபடம் பண்ணினாலல்லாமல் நமக்கு இரையகப்படாதென நிச்சயித்துக் கண்ணை விழித்துக்கொண்டு உட்காந்திருக்க, அப்போது ஒரு தவளை "பாம்பே! நீ இரைதேடும் முயற்சியை விட்டுச் சும்மா ஏன் உட்காந்திருக்கிறாய்?" என, அதைக் கேட்டுச் சர்ப்பம் "அபாக்கியனாகிய எனக்கு ஆகாரம் எங்கிருந்து கிடைக்கும்? ஏனெனில், இன்றைக்குப் பிரதோஷ காலத்தில் இரைக்காகத் திரிந்துகொண் டிருக்கையில் ஒரு தவளையைப் பார்த்து அதைப் பிடிக்க, அஃது

அங்கிருந்த மிகவுஞ் சற்பாத்திரனாகிய ஒரு பிராமண னண்டை யோடிப்போயிற்று. அதுதெரியாமல் நான் இங்குமங்கும் பார்த்துக்கொண்டிருக்கையில் அங்கே நீராடிக்கொண்டிருந்த ஒரு பிராமணப் பிள்ளையின் காலை இதுதான் தவளை யென்று நினைத்துக் கடித்தேன். அவன் அக்கணமே யிறந்தான். அப் பிள்ளையின் பிதா மிகவுந் துக்கத்தால் என்னைப் பார்த்து, 'துஷ்டப் பாம்பே, யாதொரு குற்றமுஞ் செய்யாத என் பிள்ளையைக் கடித்த படியினால் நீ மண்டூகங்களுக்கு வாகனமாகக் கடவாய், மற்றும் அவைகளுடைய சேர்க்கையாற் சீவனமும் பண்ணக்கடவாய்' என்று இப்படிச் சபித்ததனால் நான் உங்கட்கு ஊழியஞ் செய்ய வந்தேன்" என, இங்ஙனம் அப் பாம்பின் பேச்சைக் கேட்டு அஃது எல்லாத் தவ ளைக்குஞ் சொல்ல, தவளைகளெல்லாம் தங்க ளரசனுடனே கூட வெளியே வந்து மிகவுங் களிப்புடனே மந்தவிஷ சர்ப்பத்தின்மே லுட்கார்ந்தன. அஃது அவற்றிற்குப் பலவித கதிகளைக் காண்பிக்கும்போது, தவளைகள் யானை குதிரை தேர்களிலும் இவ் வாகனம் நன்றாயிருக்கிற தென்று மெச்சிச் சந்தோஷிக்க, அந்தப் பாம்பு இரண்டு மூன்று நாள் வரைக்கும் அப்படியே நடந்து, பிறகு மந்தகதியாய்ப் போகத் தொடங்கிற்று. அப்போது அவைகள் "இன்றைக்கு ஏன் மெல்லென நடக்கிறாய்?" என, புசங்கம் "நான் இப்போது பசித்திருக்கிறதனால் நடக்கக் கூடவில்லை" என, மண்டூக ராஜன், "நீ சிறு தவளையாகப் பார்த்துத் தின்றுகொண் டிரு" என, இதைக் கேட்டுச் சர்ப்பம் "எனக்கு இவ்வண்ணமே அந்தணன் சாபமிருக்கிறது, அப்படியே தாமுங் கட் டளையிட்டீர்" என்று சொல்லி நாடோறுந் தவளை

களைத் தின்றுகொண் டிருக்கும்போது, அங்கே வேறோரரவு வந்து இதன் நடத்தையைப் பார்த்து, "நம்முடைய பக்ஷணங்களை நீ ஏன் சுமக்கிறாய்? இது மிகவும் விருத்தம், உனக்கு இது யோக்கியமன்று" என, அதற்கு மந்தவிஷன் "நான் இதெல்லா மறிவேன்; ஆனால் சிலநாள் என் கருத்து நிறைவேறுங் காலத்தை யெதிர்பார்த்துக்கொண் டிருக்கிறேன்" என் றிவ்வாறு சொல்லிப் புன்சிரிப்புடனே பழையபடி நடந்துகொண் டிருந்தது. இப்படி எல்லா மண்டூகங்களையுந் தின்று கடைசியில் அவற்றின் அரசனையும் பக்ஷித்தது. எந்தச் சமயத்தில் எது செய்யவேண்டுமோ அப்படிச் செய்து சத்துருக்களை வேரோடுகூட நாசம் பண்ணவேண்டும். நெருப்புத் தன் பராக்கிரமத்தினாற் காடு முழுவதையுந் தகிக்கிறது; ஆனால் மரவேர்கள் பூமியி லிருக்கின்றன. மிருதுத் தன்மையினாற் றண்ணீருங் காற்றுஞ் செடி மரங்களை வேரோடு பிடுங்குகின்றன' என, இங்ஙனம் அதன் வாக்கியங்களைக் கேட்டு மேகவர்ணன் 'கடையானவர் இடையூறு வருமென்று பயத்தினாற் காரியங்களைத் தொடங்குகிறதில்லை; இடையானவர் காரியங்களைத் துவக்கி விக்கினம் வந்தால் விட்டுவிடுகிறார்கள்; ஆயிரம் இடையூறுகள் வந்தாலும் எடுத்த கருமத்தை முடிக்கிறவர்கள் தலையாயா ராவர். ஆதலால் நீ வெகுவித கஷ்டப்பட்டுப் புத்தியினாலே அநேக பகைவர்களைக் கொன்றாய். இது யோக்கியமாகவே யிருக்கிறது. சத்துரு, அக்கினி, ருணம் இவற்றிற் சேஷம் வைத்தால் மீண்டும் வளருமென் றறிந்து நீ வைரியைக் களைந்தாய். ஆயுதத்தால் ஒருவன் சாகிறான். புத்தியினால் அநேகம் பெயர் ஒருமிக்கச் சாகிறார்கள்' என்ற ராஜன் மொழி

யைக் கேட்டு, சிரஞ்சீவி 'எல்லாம் உன் பிரதாபத்தா லாயிற்று. உன்னைப்போ லிருக்கிற சத்துருக்களுக்குத் தெய்வமும் விதியும் நல்ல புத்தியைக் கொடுக்கும்; அசத் துக்களுக்குத் துர்ப்புத்தியைக் கொடாநிற்கும்; இது வல்லாமல் தடியெடுத்துக்கொண் டடிக்கிறதில்லை. கர் மத்தை யநுசரித்துக்கொண்டிருக்கிற புத்தியினுற் பயன் களை யடைகிறார்கள்' என் றிப்படிச் சொல்லக்கேட்டு மேகவர்ணன் அம் மரத்தின்மேற் சுகமாய் அரசு செய்து கொண்டிருந்தது."

இங்ஙனஞ் சோமசன்மா ராஜகுமாரர்கட்குக் காக கூகையின் கதையாகச் சந்திவிக்கிரக மென மூன்றாந் தந் திரஞ் சொல்லினான்.

## நான்காவது

# லப்தஹானி

சோமசன்மா அரச குமாரரை நோக்கி, "இடருற்ற காலையில் அறிவு குன்றுதவன் குரங்கு முதலையினின்றும் விடுபட்டாற்போற் பெருந் துன்பத்தினின்று மீளுவான்" என, சிறுவர்கள் "அஃதெவ்வணம்? சொல்வாய்" என, ஆசிரியன் சொல்லுவான் :

"கங்கைக் கரையில் நாவல் மரத்தின்மேற் சுமுக னென்னும் ஒரு வானரம் சிலகாலம் வாசம்பண்ணிக் கொண் டிருக்கையில், அங்கே வந்த ஓர் இளைத்த முதலையைப் பார்த்து, 'நீ என் கிருகத்துக்கு விருந்தாக வந்தமையால் உனக்கு நாவற்பழந் தருகிறேன்' என்று சில பழங்கொடுக்க, அது தின்று அத்தியந்த சந்தோஷத் துடனே தன்னிடத்திற்குப்போய் அன்று தொடங்கித் தினந் தினம் வந்து நாநா வார்த்தைகள் பேசிக்கொண்டு இரண்டும் அந்நியோந்நியமா யிருக்கையில், ஒருநாள் முதலை சில கனிகள் கொண்டுபோய்த் தன் இல்லாட்குக் கொடுக்க, அது தின்று அக் கனி அமிர்தம்போ லிருக்கக் கண்டு தன் நாயகனைப் பார்த்து, 'பிராணநாதா! இந்தத் தித்திப்பான கனிகள் எங்கிருந்து கொண்டுவந்தாய்?' என

ஆண் முதலை: சுமுகவானர னென்னும் என் நண்பன் எனக்கு நாடோறுங் கொடுக்க நான் அங்கேதானே

அவற்றைப் புசித்துக்கொண்டு வந்தேன். இன்றைக்குத் தின்று மிகுந்ததை உனக்குக் கொணர்ந்தேன்' என,

பெண் முதலை : இம்மொழிகளைக் கேட்டு, 'இத் தீங்கனி தின்பவன் ஈரல் அமிர்தத்திற் கொப்பா யிருக்கும், அதைக் கொணர்ந்து எனக்குக் கொடு, அதனால் நான் மூப்புச்சாக்கா டில்லாமல் உன்னோடு நெடுங்காலஞ் சுகித்திருப்பேன்' என

முதலி : இதைக் கேட்டு, 'எனக்கு உயிர்க்குயிரா யிருக்கிற நட்டோனாகிய வானரத்துக்கு நீ ஏன் இந்தத் தீங்கு நினைக்கிறாய்?' என,

பெண் முதலை : 'நான் உனக்கு அசத்தியமா யிருந்தால் அதன் ஈரலைக் கொணர்ந்துகொடு, இல்லாவிட்டால் நான் உயிர் வைத்துக்கொண்டிரேன்' என,

ஆண் முதலை : 'காதலியே! சகோதரனினும் மித்திரன் அதிகமாதலால் அவனைக்குறித்து நீ அடம் பண்ண வேண்டாம்' என்று மோவாய்க்கட்டையைப் பிடித்து வேண்டிக்கொள்ள,

பெண் முதலை : 'நீ என்றைக்கும் என் பேச்சுக்குக் குறுக்குச் சொன்னதில்லை, இன்றைக்கு மாத்திரம் மனக் குறைச்சல் பண்ணுகிறாய், ஆதலால் இதோ நான் சீவனை விடுகிறேன்' எனப் பிடிவாதஞ் செய்ய,

கரா : பெண்ணின் நிச்சயத்தை யறிந்து, 'அச் சுமுகன் எனக்குக் கொல்லக்கூடாதவனா யிருக்கிறான், நீயா பிடித்ததை விடாமலிருக்கிறாய், ஆதலால் நான்

இருதலைக்கொள்ளி யெறும்புபோ லாயினேன்' என்று இங்ஙனஞ் சொல்லிச் சுமுகனிடத்திற்குப் போயிற்று. அப்போது,

சுமுகன் : 'நண்பனே! இன்றைக்கேன் விசனமா யிருக்கிறாய்?' என,

முதலை : 'மற்றொன்றுமில்லை, உன் மைத்துனி என்னைப் பார்த்து, "துஷ்டா! நன்றி கெட்டவனே! நீ யாராலே சீவனம் பண்ணுகிறையோ அவனை ஒரு நாளைக்காயினும் நமது வீட்டிற் கழைத்துவந்து விருந்திட வேண்டாமா? அவன் வீட்டுக்கு மாத்திரம் வெட்கமில்லாமற் போய்ப் போய் நல்ல பழங்களைத் தின்னுகிறாயே" என்றிப்படித் திட்டிக் கோபித்தாள். ஆதலால் நீ என் வீட்டுக்கு வா, உன்னைக் குறித்துப் பலபல பதார்த்தங்கள் தேடிவைத்து வழி பார்த்துக்கொண்டு உட்காந்திருக்கிறாள்' என,

வானரம் : நண்பனே! எனக்குத் தண்ணீரில் வரக்கூடாது. ஆதலால் நீ என் பிரியமுள்ள மைத்துனியை இங்கே கூட்டிக்கொண்டு வா' என,

மகரம் : சுமுகனே! நான் கங்கைக்கரையி லிருக்கிறேன், நீ என் முதுகின்மேல் உட்காந்துகொண்டு வா, நோவாமற் கொண்டுபோவேன்' என, அதில் நம்பிக்கை வைத்துக் குரங்கு அப்படியே யுட்காந்து கொண்ட மாத்திரத்தில் முதலை தண்ணீரிற் குதித்துப் போகையில், வானரம் 'எனக்கு அச்சமாயிருக்கின்றது, மெள்ள மெள்ள நட' என்றது.

முதலை : அதைக் கேட்டு, இப்போது சுமுகன் நம்முடைய அதீனத்தி லிருக்கிறான், இனி இவனுக்கு நங் கருத்தை வெளியிடுவதற்குக் குறையென்ன விருக் கின்றது? உரலில் அகப்பட்டது உலக்கைக்குத் தப் புமா?' என்றிங்ஙனந் தனக்குள்ளே தீர்மானித்துக் கொண்டு, 'மித்திரா! நீ உன் இஷ்ட தேவதையை நினை, பெண்சாதியின் பிடிவாதத்தால் உன்னைக் கொல் லக் கொண்டுபோகின்றேன்' என,

குரங்கு : 'நான் என்ன பிழை செய்தேன்?' என,

முதலை : 'நீ நேற்றுக் கொடுத்த நறுங்கனிகளை என் மனைவி தின்றதன்மேல், "இத்தன்மையான தீங்கனி யைத் தினந் தின்னுகின்ற பாக்கியவான் ஈரல் கேவலம் அமிழ்தத்தை யொத்திருக்கும்; ஆதலால் நீ அவ னீரலை எனக்குக் கொணர்ந்து கொடாவிடில் நான் பிராணனை வைத்திரேன்" என்றாள், அதைக் குறித்துத்தான் உன் னைக் கொண்டுபோகிறேன்' என,

வானரம் : அதைக் கேட்டு, 'ஓகோ! இப்படி யென்று எனக்கு முன்னமே தெரிந்திருந்தால் அந்த மரத்தின்மேல் ஒளித்து வைத்திருக்கிற அந்த ஈரலை உனக்கு அங்கேயே கொடுத்திருப்பேன்! வெற்றிருத யத்தோ டிருக்கையில் என்னை வீணாகக் கொண்டுவந் தாய்' எனக் கிலேசப்பட, அப்போது,

மகரம் : 'என் பிராணமித்திரா! அதைக் கொடுத் தால் அவள் சந்தோஷமாவாள்' என்று சொல்லி, வான ரத்தை அதிசீக்கிரத்தில் முன்னிடத்திற் கொண்டுவந்து விட்டது. உடனே வானரம் குதித்து மரத்தின்மே

லேறிக்கொண்டு இன்றைக்குக் காலன் கையிலிருந்து விடு பட்டேனென் றெண்ணிக்கொண் டிருக்கையில்,

முதலை : 'மித்திரா! ஈரலைச் சுறுக்காய்க் கொடு; உன் அண்ணியார்க்குக் கொடுத்துவிட்டு வருகிறேன்' எனக் கேட்க,

வானரம் : நகைத்து, 'மூடா! துஷ்டா! ஈரல் உடம்பைவிட் டிருக்குமா? அஃதிருக்கட்டும், நீ விசுவாச காதகனாதலால் இங்கிருக்கவேண்டாம், சீக்கிரத்திற் புறப் பட்டுப் போ, உன்னைப் பார்க்க என் கண் நாணுகின் றது' என் றிங்ஙனஞ் சொன்னவுடனே,

முதலை : பச்சாத்தாபப்பட்டு, நான் இவனுக்கு வழியில் உண்மை சொல்லி யிழுந்தேன், இப்போது மறுபடி விசுவாசம் வரப் பேசி இவனைக் கொண்டுபோக வேண்டும் என் றுலோசித்து, 'மித்திரா! நான் உன் னைப் பரீக்ஷிக்கலாமென்று இவ்வாறு சொன்னேன், மேலும் உலகத்தில் நடவாத உன் பேச்சை நிசமென் றெண்ணித் திருப்பிக் கொண்டுவரவில்லை; ஈரல் சரீ ரத்தை விட்டு வேறிடத்தி லிராதென்பது சிறு பிள்ளைகட் குந் தெரிந்திராதா! ஆனால் நான் இது விளையாட்டுக்குச் செய்தேன். ஆதலால் நீ என் வீட்டுக்கு லேசமும் பய மில்லாமல் வா. உன் பொருட்டு என் பெண்டாட்டி வழி நோக்கிக் கண் பூத்துப்போகக் காத்துக்கொண் டிருப்பாள்' என,

சுமுகன் : 'பசித்தவனது விசுவாசத்தில் நம்பிக்கை வைக்கலாகாதென்று பிரியதரிசனனைக் கங்காதத்தன் அஞ்சி மீண்டுங் காணவில்லை' என, அப்போது முதலை

பிரிய தரிசனனுக்கு அவன் ஏன் அஞ்சினன்?' என, வானரஞ் சொல்லும்:

## கதை - 1

ஒரு கிணற்றிலிருந்த கங்காதத்த னென்னும் ஒரு பெருந் தவளையை மற்றைத் தவளைகள் மிகவும் வருத்தப் படுத்திக்கொண் டிருந்ததனால், அது ராட்டினத் தோண்டி நெறியே வெளியில் வந்து, இந்தத் தாயாதிகள் வலியவர் களும் பலருமா யிருக்கிறார்கள், இதற்கென்ன செய்வோ மென் றெண்ணமிட்டுக்கொண் டிருக்கையில், ஒரு பாம் பின் புற்றைப் பார்த்து, வழிப்போக்கர் காலிற் றைத்த முள்ளை முள்ளாலேயே வாங்குவதுபோல் இந்தப் பாம்பை நமது வீட்டுக்குக் கொண்டுபோய்ப் பங்காளி களைக் கொல்லவேண்டுமென நிச்சயித்து, வளையின் கிட்டவிருந்து பாம்பைக் கூவிற்று. பாம்பு, இவன் மாந் திரிகனோ நம்மைக் கொல்ல வந்தவனோ, கூப்பிடுகிறவன் இன்னவனென்று தெரியவில்லை, ஆதலால் இவனை இங் கிருந்தே கேட்கவேண்டுமென்று தீர்மானித்து, "நீ யார்?" என, மண்டூகம் "நான் கங்காதத்த னென்னும் மண்டூக ராஜன், உன்னைச் சரணமாக அடைந்தேன்" எனக் கேட்டுப் பிரியதரிசனன் "நெருப்புத் துரும்பு களின் சேர்க்கை நில்லாதது போல நான் உன் பரம சத்துருவாயிருக்கையில் நீ இங்கே வந்து இந்த விபரீத பாஷணம் ஏன் பண்ணுகிறாய்?" என, கங்காதத்தன் "என்னை மாற்றார் வருத்துகிறார்களென்று உன்னிடத் திற்கு வந்தேன். நீ எங்கள் சன்ம சத்துருவென்பது மெய்யே; ஆனால், வலிய பகைவர்களை வைரிகளைக் கொண்டே யடிக்கவேண்டுமென நீதிநூ லிருக்கிறது."

எனக் கேட்டுச் சர்ப்பம் "என் வரவு அங்கு எப்படிக் கிடைக்கும்?" என, மண்டூகம் "உன்னை நான் அநாயாச மாய்க் கொண்டுபோவேன்" என, அதைக் கேட்டுப் பிரியதரிசனன், நாம் தீனியைக் குறித் தென்றைக்கும் விசாரப்பட்டுக்கொண் டிருக்கிறோம்; அவ்வாகாரந் தானேவந்து இன்றைக்கு நம்மை யழைத்துக்கொண்டு போக விருக்கையில் ஆலசியம் ஏன் பண்ணவேண்டும்; வலிய வந்த சீதேவியை வேண்டா மென்று தள்ள லாகாதென்று தனக்குள் ஆலோசித்துக் கொண்டு தவளையின் பின்னே வர, தவளை அதை யிராட்டினத் தின் வழியாகக் கொண்டுபோய்த் தன் வீட்டில் வைத் துக் கொண்டது. பின்பு அந்தப் பாம்பு தவளைகளை யெல்லாந் தின்றது. பிறகு கங்காதத்தனைப்பார்த்து, "மித் திரா! உன் சத்துருக்களை யெல்லாங் கொன்றபடியினால் எனக்கு ஏதாவது ஆகாரங் கொடு" என, தவளை "நீ உன் சிநேகிதன் காரியத்தைச் செய்தாய், இப்போது வந்த வழியே வீட்டுக்குப் போகலாம்" என, அதைக் கேட்டுப் பாம்பு "கங்காதத்தா! அந்தப் பிலத்தில் வேறு ஏதாவது வந்து தங்கியிருக்கும், யான் அங்கே போய் என்ன செய்வேன்! ஆதலால் நீயே உன் சமுதாயத்தி லிருந்து நித்தியம் எனக்கு ஒவ்வொரு தவளை கொடுத் துக்கொண்டு வா, இல்லாவிட்டால் நான் எல்லாரையும் ஒருங்கே கொல்லுவேன்" என, இவ் வுத்தரவைக் கேட்டுக் கங்காதத்தன் பயப்பட்டு நித்தியம் ஒரு தவளை விழுக்காடு கொடுத்துக்கொண்டிருக்கத் தின்று, கடைசி யில் ஒருநாள் கங்காதத்தன் புத்திரனையுந் தின்றது. அதைக் கங்காதத்தன் மனைவி கண்டு மிகவும் இடும்பை யுற்றுக் கங்காதத்தனைப் பார்த்து, "நீர் இக் கொடியோ

ளைக் கொண்டுவந்து குலத்தை நாசம் பண்ணினீர். இனி இவ்விடம் விட்டுப் புறப்படும், இல்லாவிடில் இவ ளைக் கொலைசெய்யச் சூழ்ச்சி செய்யும்" என, இதைக் கேட்டு ஆராய்ச்சி செய்துகொண் டிருக்கையில், பாம்பு "எனக் கேதாயினுந் தின்னக் கொடு" என, கங்காதத் தன் "மித்திரா! நான் இருக்கையில் நீ தீனிக்கு ஏன் விசாரப்படுகிறாய்! இப்போது என் மனைவியை யனுப்பி வேறு கிணற்றிலிருந்து இன்னும் மண்டூகங்களை யழைப் பிக்கிறேன். அதுவரையும் நீ சும்மா இரு" எனக் கேட் டுப் பிரியதரிசனன் "நீ எனக்கு அன்ன தாதா வாத லாற் பிதாவாக விருக்கிறாய், உடனே தவளைகளை யழை ப்பி" என, பின்னர் மனைவியை மற்றொரு கூபத்திற் போக்கி, "போனவள் இன்னும் வரவில்லை யாதலால், நானே போய் அநேக தவளைகளைக் கொண்டு வரு கிறேன், நீ இங்கே சுகமாக விரு" என்று சொல்லித் தானும் ராட்டினவழியே புறப்பட்டுப் போயிற்று. பின்பு பிரியதரிசனன் தவளைகளைக் குறித்து வழிபார்த் துக்கொண்டு அங்கேயே யிருந்து அப்படி வெகுநாள் கழிகையில், மற்றொரு வளையிலிருந்த பல்லியைப் பார்த் துப் பிரார்த்தித்து, "ஓ பல்லியே! உனக்குங் கங்கா தத்தனுக்கும் மிகவுஞ் சிநேகமாகையால் அவனிருக்கிற விடத்திற்குப் போய் உன்னைப் பிரியதரிசனன் அழைக் கிறானென்றும் இனி யுனக்குத் துரோகம் பண்ணினால் எனக்கு ஆணையிருக்கிறது, நீ மனதிற் சிறிதும் ஐயப் படாதே யென்றும் இவ்வாறு சொல்" என, அதன் உத்தரவைப் பெற்றுக்கொண்டு அக் கவுளி கங்காதத் தன்பாற் போய் எல்லாச் செய்தியையுஞ் சொல்ல, கங்கா தத்தன் "பசித்தவன் விசுவாசத்தை நம்பலாகாது.

ஆதலால் நீ போய்ப் பிரியதரிசனனுடனே, ‘ துஷ்டா ! இனிக் கங்காதத்தன் வரான் ’ என்று சொல்” என, கவுளி போய்ப் பாம்புக்கு எல்லாஞ் சொல்லிற்று. அப் படிப்போல, நான் மீண்டும் உன் வீட்டுக்கு வரேன் ’ என, இதைக் கேட்டு முதலை ‘நீ வராவிடில் எனக்கு நன்றி மறந்தமை சம்பவிக்கும், ஆதலால் நான் பட்டினியிருந்து உன்னைக்குறித்து இங்கேயே பிராணனை விடுவேன் ’ என, அப்போது வானரம் ‘ நரி நீள்செவியனுக்கு நம்பிக் கை வருவித்து அதை எப்படிக் கொன்றதோ அப்படி நீயும் என்னைக் கொலைசெய்ய விரும்புகிறாய் ’ என, முதலை அதைக்கேட்டு ‘அஃதெப்படி?’ என, குரங்கு சொல்லும்:

## கதை - 2

ஓ ரடவியி லிருந்த கராளகேசரி யென்னுஞ் சிங்கத் துக்குத் தேகம் ஏதோ குணமில்லா திருந்தமையால் தூசர னென்னும் நரியைப் பார்த்து, “ பிரதானியே ! இன்றை க்கு எனக்கு எங்கும் போகக்கூடாது, நீயே போய் யாதாயி னும் இரை கொண்டுவா ” என, நரி நாலண்டையுமோடித் திரிகையில் ஒரு கழுதையைப் பார்த்து, “ மாமா ! கும் பிடுகிறேன், நீ இப்போது மிகவும் இளைத்துப் போனாய் ” என, அப்போது கழுதை “ மருமகனே, என்ன சொல் வேன் ; எனக்குத் தலைவன் வண்ணான், அவன் அத்தி யந்தம் கண்டகன், என்மேற் பெருஞ்சுமைகளைப் போட் டுக் கொல்லுகிறதே யன்றி வயிற்றுக்குப் புல்லுச் செத்தை போடுகிறதில்லை ; புழுதியிலிருக்கும் அறுகங் கட்டையைத் தின்றுகொண் டிருக்கிறேன். அது உடம் புக்கு எங்ஙனம் புஷ்டிகொடுக்கும் ; என்பிழைப்பு ஒரு பிழைப்பா ! ” என, நரி “ இப்படி யிருந்தால் நீ என்

ளுேடு கூட வா, ஆற்றங்கரையில் பச்சைப் புல் நிரம்ப விருக்குமிடம் உனக்குக் காண்பிக்கிறேன்" என, அதைக் கேட்டுக் கழுதை "அவ்விடம் நன்றாயிருக்கும், அங்கே நான் ஒன்றியாய் எப்படி யிருப்பேன்!" என, தூசரன் "அங்கே விஸ்தாரமா யிருக்கின்ற கழுதைகள் எங்களுக்குத் தக்க நண்பன் அகப்பட்டாற் கொண்டுவர வேண்டுமென்று எனக்குச் சொல்லியிருக்கின்றமையால் உனக்கு உரைத்தேன்" எனக் கேட்டு ஆசையினுற் கர்த்தபம் பின்னே போக, அதைக் கண்டு சிங்கம் பாய்ந்தது. உடனே நீள்செவியன் ஓட்டம் பிடித்தது. பின்னர் நரி கோபித்துக் கண்டீரவத்தைப் பார்த்து, "இன்றைக்கு உன் வீரத்தை நான் பார்த்தேன், உன்முன் எதிர்ப்பட்ட கழுதையும் ஓடிப்போயிற்று. இனி நீ யானையை எவ்வா றடிப்பாய்!" என, அதைக் கேட்டுக் கராளகேசரி தலையிறக்கமா யிருக்க, மீட்டும் நரி "மற்றும் ஒருதரம் நான் அவனை உன்னண்டை கொண்டுவருகிறேன், அப்போதாயினும் ஏமாறுமல் அவனை யடிக்கவேண்டும்" என்றுசொல்லி, நீள்செவிய னருகே போய், "நீ ஏன் ஓடிப்போகிறாய்?" என, கழுதை "மருமகனே! என்னை இந் நேரம் எமன் வாயிற் கொடுத்திருப்பாய், அதிருஷ்டத்தினுற் பிழைத்தேன்; வச்சிரம்போல் நகத்தையுடைய அப் பிராணி யார்?" என, அப்போது நரி நகைத்து, "அம்மான்! அந்தக் கழுதை உன்னைப் பார்த்து மிதமற்ற களிப்போடே உன்னண்டை வருகையில் நீ வீணுகப் பயந்தோடினுய். அவன் இப்போது நீள்செவியன் என்னை நட்புக்கொள்ளாவிட்டால் நான் உயிர் வைத்திரேன் என்று நிச்சயித்திருக்கிறபடியால் நீ விரைவாக வரவேண்டும்; வராவிடிற் கொலைப்பாவம் நேரி

டும்" எனக் கேட்டுக் குண்டுக்கழுதை அதன்பின்னே போகச் சிங்கம் அந்த க்ஷணமே அதை யடித்து, நண்டைச் சுட்டு நரியைக் காவல் வைத்தாற்போல அதற்கு நரியைக் காவல்வைத்து நீராடப்போயிற்று. இதற்குள்ளே நரி அதன் ஈரலையுங் காதையுந் தின்றது. பின் சிங்கம் வந்து பார்க்கையில் ஈரலுங் காது மில்லாமையாற் சம்புகத்தைப் பார்த்து, "இதை யார் தின்றது?" என, நரி "இக் கழுதைக்கு ஈரலுங் காதுமில்லை, இருந்தால் அது மறுபடியும் உன்னண்டை வருமா!" என, அது இதை உண்மையென்று நம்பி நரிக்குள்ள மாம்ஸ பாகங் கொடுத்து மற்றதைத் தின்றது. அப்படி நீ என்னைக் கொல்ல விரும்புகிறாய்' என, முதலை 'எவன் தன் பிரயோசனத்தைவிட்டு உள்ளதைச் சொல்லுகிறானோ அவன் யுதிஷ்டிர னென்னுங் குசவனைப்போற் றுன்பமடைவான்' என, வானரம் 'அஃதெப்படி?' என்று கேட்க, மகரஞ் சொல்லும்:

## கதை - 3

ஒரு குப்பத்தில் யுதிஷ்டிர னென்னுங் குயவன் பானைகளை யெடுக்கையில் ஓட்டாங்குச் சொன்று கபாலத்திற் றுக்கிக் கத்தி வெட்டுப்போற் காயம்பட்டது. பிறகு சிலநாட் கழித்து அத் தேயத்திற் கருப்பு வந்தமையால் அவன் மறு தேயத்திற்குப்போய் ராஜனிடத்திற் சேவகத்திலமர, அவ்வரசன் அவ் வடுவைக் கண்டு இவன் போர்க்களத்தில் முன்காயம் வாங்கின சூரனென் றெண்ணி அவனை மிகவும் உபசரித்து அவனிடத்திற் றயையா யிருந்தான். அதுமுதற்கொண்டு மற்றைச் சேவகர்கள் அவன் மேற் பொறாமையா யிருக்கத் தலைப்பட்டு ராஜன் தயை

யிருக்கையால் ஒன்றும் பேசாமலிருந்தார்கள். அப்படி யிருக்கையில் ஒருநாள் ராஜன் ஏகாந்தமாய் யுதிஷ்டிரனைப் பார்த்து, "உனக்கு இக் கத்தி வெட்டு யாருடைய சண்டையிற் பட்டது?" என, குசச் சேவகன் "ராஜனே! நான் சூளை போட்டுக்கொண் டிருக்கையில் விழுந்து ஓடு பட்டு இக் காயம் பட்டது" என, இதைக் கேட்ட மாத்திரத்தில் ராஜன் நாணிக் குலாலனைப் பார்த்து, "நான் மோசம் போனேன்; இது இரண்டாம் பெயர்க்குத் தெரிவதற்குள்ளே நீ ஓடிப்போ, இதைச் சூரர்கள் கண்டால் நீ உன் உயிர்காணமாட்டாய்" என, குயவன் "சுவாமி என் கைகால்களைக் கட்டி ரண ரங்கத்திற் போட்டு என் அஸ்தலாகவத்தைப் பார்த்தருளும்; வாய் புளித்ததோ மாங்காய் புளித்ததோ என்று சொல்லலாமோ!" என, ராஜன் "நீ பிறந்த குலம் போர்க்களத்தில் வருவதன்று, அங்ஙனமாக நீ நரிக்குட்டிபோல் ஏன் சும்மா துள்ளுகிறாய்? குலைக்கிற நாய் வேட்டை பிடிக்குமோ!" என, குலாலன் "அந் நரிக்குட்டி யாரிடத்திற் றன்னைப் புகழ்ந்துகொண்டது? சொல்லுமையா" என, அரசன் சொல்லுவான்:

## கதை - 4

"ஒரு வனத்திற் பெட்டைச் சிங்கத்தோடு கூடியிருந்த சிங்கத்துக்கு இரண்டு குட்டிக ளுண்டான வுடனே அது பல விலங்குகளைக் கொன்று தன் பெண் சிங்கத்தின் கையிற்கொடுத்து அதைப் பார்த்து, 'இப் பிள்ளைகளுக்கு விளுத் தெரிகிறவரைக்கும் இவர்களை நம்பித் தனியே விட்டிராதே' என்று பத்திரஞ்சொல்லி, நித்தியம் தான்மாத்திரம் போய் மிருகங்களைக் கொன்று

கொண்டுவந்து கொடுத்துக்கொண் டிருக்கையில், ஒரு நாள் அதற்கு ஒன்றுங் கிடையாமற் றிரும்பி வீட்டுக்கு வரும்போது, வழியில் கையில் அகப்பட்ட ஒரு நரிக் குட்டியை அடியாமற் பிடித்துப் பெட்டையண்டை கொண்டுவந்து, 'இன்றைக்கு இதைவிட வேறொன்றுங் கிடைக்க வில்லை' என, அப் பெட்டை அக் குட்டி மிக வுஞ் சிறிதா யிருக்கிறதைப் பார்த்துத் தன் குழந்தை களி லொன்றாய்க் காப்பாற்றிக்கொண்டு வந்தது. அம் மூன்றும் பெரியனவாகி ஒருநாள் காட்டுக்குப் போன போது, அங்கொரு யானையைக் கண்டு இதன் கிட்டப் போகலாகாதென்று சொல்லிவிட்டு நரிக்குட்டி வீட்டுக்கு ஓடிப்போயிற்று; மற்றிரண்டும் அதைப் பார்த்து அதன் பின்னே வீட்டுக்கு வந்து தங்கள் தாயுடனே அந் நரி யின் காரியத்தைச் சொல்ல, நரிக்குட்டி அதைக் கேட்டு மிகவுங் கோபித்து, 'நான் இவர்களிலும் சௌரியத்திற் குறைந்தவனா! இவர்கள் என்னைப் பழித்து நகைப்பா னேன்! கூழுக்கு மாங்காய் தோற்குமா! நான் இவர் களைத் தண்டித்து என் பராக்கிரமத்தைக் காட்டுவேன். கொட்டிநூற் றேள் கொட்டாவிட்டாற் பிள்ளைப் பூச் சியா!' என, அதைக் கேட்டுப் பெண்சிங்கம் நரியை ஏகாந்தமாய் ஓரிடத்திற் கொண்டுபோய், 'நீ நரிக்குட்டி, உன் குலத்தில் யானையைக் கொல்லுகிற சக்தியில்லை, உன்னை நான் என் பால்கொடுத்து வளர்த்தமையால் இந்தப் பராக்கிரமஞ் சொல்லிக் கொள்ளுகிறாய், அவர் கள் இனி உன்னை இன்னானென் றறிகிறதற்கு முன்னே நீ புறப்பட் டோடிப்போ, இல்லாவிட்டால் அவர்கள் கையில் அடியுண் டிறந்து போவாய்' என, அதைக் கேள்விப்பட்டவுடனே சம்புகம் ஓடிப்போயிற்று. ஆத

லால் நீ குசவனென்று வெளிப்படுவதன் முன்னே விரை வாய் இதைவிட்டுப் போ" என, அவன் அந்த ராஜா வின் உத்தாரப்படி ஓடிப்போனான்' என, இப்படி முதலையின் பேச்சைக் கேட்டுச் சுமுகன் 'விவேகிகள் ஸ்திரீகளின் பேச்சுக்குக் காது கொடுக்கலாகாது. அப் பேச்சுக்குக் காது கொடுத்து முன் நந்தனராஜ னென் பவனும் வரருசிப் பிரதானியுஞ் சபை நடுவிலே ஏளன மடைந்தார்கள்' என, முதலை 'அஃதெப்படி?' என, வானரஞ் சொல்லும் :

## கதை - 5

பராக்கிரமசாலியான நந்தனராஜ னென்பவன் துரைத்தனம் பண்ணிக்கொண் டிருக்கையில், தன் மனை யாட்டி ஏதோ ஒரு மொழியாற் பிணங்கிக்கொண்டதைக் குறித்து அவன் எவ்வித சமாதானஞ் செய்துங் கேளா மல், அவள் "நீ வாயிற் கடிவாளம் போட்டுக்கொண்டு உன் முதுகின்மேல் என்னை யெடுத்துக்கொண்டு குதிரை போலக் கனைத்தால் நான் உன் பேச்சிற்குச் செவி கொடுப்பேன்" என, அப்போது நிருபன் அவள் பிரீ திக்காகச் சொன்ன வண்ணஞ் செய்தான். அதைப் பிர தானியின் மனைக்கிழத்தி கேள்விப்பட்டு அவளுங் கோப மாய்த் தன் பதியுடனே பேசாமல் முறுக்கா யிருக்க, அவ் வேளையில் முழுதும் அறிந்தவனாகிய வரருசியென் னும் மந்திரி தன் மனைவிக்கு எவ்வித ஆறுதல் சொல்லி யும் அவள் உடன்படாமல் "நீ தலை மொட்டையிட்டுக் கொண்டு என்னை வலசாரி யிடசாரியாகச் சூழ வந்து சாஷ்டாங்க நமஸ்காரம் பண்ணுவாயானால் உனக்கு நான் உட்படுவேன்" என, மந்திரி அவள் பிடிவாதத்

துக்காக அங்ஙனஞ் செய்தான். மறுநாள் உதயத்தில் அவன் சபையில் வந்திருந்த அரசனிடத்திற்குப் போக, அரசன் பிரதானியைப் பார்த்து, "நீ எதற்காக முண்டனம் பண்ணிக்கொண்டாய்?" என, மந்திரி "மகாராஜா வவர்கள் குதிரையைப்போலக் கனைத்தபடியால் அடியேன் மழுங்க மொட்டையிட்டுக் கொண்டேன்" என, இப்படி இருவர் பேச்சையுங் கேட்டுச் சனங்கள் நடந்த செய்தியெல்லாம் அறிந்துகொண்டார்கள். ஆதலால், மாதர்களுடைய அநுசித வார்த்தைகளைக் கேட்டு மௌனமாயிருக்கவேண்டும். அங்ஙனஞ் செய்யாது அவரோடு மறுமொழி சொல்லுகிறவன் புலித்தோலைப் போர்த்துக் கொண்டிருந்த கழுதையைப்போற் கிலேசமடைவான்' என, 'அஃதெப்படி?' என்று முதலை வினவ, குரங்கு விடை விடுக்கும் :

## கதை - 6

நருமதை யாற்றங்கரையில் பவானி யென்னும் ஓரேழை வண்ணான் தன் கழுதை தீனியில்லாமல் நாளுக்குநாள் இளைத்துப்போவதைக் குறித்து விசனப்பட்டுக்கொண் டிருக்கையில், ஒருநாள் நினையாமற் கிடைத்த புலித்தோலைக் கொண்டுவந்து களிப்புடனே இரவில் அக் கழுதைமேற் போர்த்து ஊரார் பயிர்களில் மேய்வித்துக் கொண்டிருக்கும்போது, குடிகள் இது புலியென்று நினைத்து ஓடிப்போவார்கள். இப்படி இருக்கையில் இப் பெருவாயன் மிகவும் பெருத்து ஒருநாள் பயிரிற் றனியத்தைத் தின்றுகொண் டிருக்கும்போது ஒரு பெண்கழுதையின் கூச்சலைக் கேட்டு மிகவும் பெருங்கூச்சலிடத் தொடங்கிற்று. அப்போது அக் கொல்லைக்காரன் இது புலியன்

றென்று நிச்சயித்து அதைப் பிடித்து இடுப்பொடிய அடித்தான். ஆதலால் மாதர்களுடனே வீணைகப் பேச லாகாது. இப்படி யிருக்கையில் நீ அவளைக் குறித்து என்னைக் கொல்லவிருந்தாய். ஆனால், இது உன் குற்ற மன்று, விசுவாச காதகம் பண்ணுதல் உன் சாதிக்கே இயல்பா யிருக்கின்றது; அது சாதுக்களின் சேர்க்கை யாலுங் குணமாகாது. மேலும், துஷ்டர்கட்கு உபதே சித்துப் பயனில்லை' என்றிப்படிப் பேசிக்கொண் டிருக் கையில், சலத்திலிருந்து ஒரு சலசரம் வந்து, 'உன் மனை யாள் எதிர்பார்த்துக்கொண் டிருந்து பட்டினியா லிறந் தாள்' என, அந்த நாராசஞ் செவியி லேறினவுடனே முதலை 'நான் கொடியோனாதலால் இத்தன்மைய இடரி லகப்பட்டேன். முதலாவது, நண்பனுக்குப் பொல்லாத வனானேன். இரண்டாவது, மனைக்கிழத்தியும் இறந்தாள். வீடுங் காடாயிற்று; ஏனென்றால் இல்லக்கிழத்தி யில் லாத இல்லஞ் சுடலையன்றோ! ஆதலால், மித்திரா! என் பிழையை மன்னி, நான் உனக்குத் துரோகம் நினைத்த தனால் தீக் குதிக்கிறேன்' என, இதைக் கேட்டு வானரம் 'எவள் பேச்சினால் நீ கொலைத்தொழிற்கு ஏற்பட் டையோ அவள் சாவைக் குறித்து இப்போது கிலே சித்து உயிர்விட நினைக்கிறாய்; அப்படிப்பட்ட துர்க் குணியின் சாவுக்குக் களிக்க வேண்டும். ஆதலால், அந்தத் துஷ்டையைக் குறித்துச் சோகமுறாமல், முதலாய்! நீ உன் சாகைக்குப் போ' என, மகரம் தன் வீட்டுக்குப் போயிற்று. அப்போது அங்கே வேறொரு முதலை யிருக்கக் கண்டு, நம் இடத்தையும்

முடைய சிநேகிதனைவிடச் சொல்லுகிறவர்க ளில்லை, ஆகையால் அவனையே வினவவேண்டும் என்று உறுதி செய்து, மீண்டும் நாவல்மரத் தண்டை வந்து சமுகனைப் பார்த்து, 'மித்திரா! பட்ட காலிலே படுங் கெட்ட குடியே கெடும் என்றாற்போல என் அபாக்கியத்தினால் என் வீட்டையும் ஒருவன் பிடுங்கிக்கொண்டான், இனி நான் என்ன செய்வேன்!' என முறையிட, வானரம் 'நன்றி கெட்டவனே, எனக்குப் பொல்லாங்கு தேடின நீ மறித்தும் முட்டாட்டனமாய் என்னிடத்துக்கு ஏன் வந்தாய்? மூடனுக்கு உபதேசித்தால் அவன் வீடுடைய வனை வீடிழக்கப் பண்ணுவான்' என, முதலை 'இஃதெங் ஙனம்?' என, குரங்கு சொல்லும்:

## கதை - 7

ஒரு மரத்தின்மேற் கூடுகட்டி அதில் வாழ்ந்து கொண் டிருந்த இரண்டு தூக்கணாங் குருவிகளுள் ஒன்று, ஆலங்கட்டியுடனே கூடப் பெருமழை பெய்கையில், குளிரினாலே நளிர்பிடித்துப் பல்லுக் கிட்ட நடுங்கிக் கொண்டு ஒரு மரத்தடியில் ஒதுங்கி யிருந்து வருந்தும் வானரத்தைக் கண்டு, "உனக்குக் கால்கைக ளிருந்துங் குளிர் காற்று முதலிய துக்கத்தை ஐயோ நீ ஏன் அனுப விக்கின்றாய்? நீ ஏன் வீடு கட்டிக்கொள்ளவில்லை?" என் றிரக்கத்தாற் சொல்ல, இதைக் கேட்டு அத் துஷ்டக் குரங்கு "ஊசி மூஞ்சி மூடா! நீ வல்லவனுக்குப் புத்தி சொல்லுகிறையா! எனக்கு வீடு கட்டுகிற சக்தியில்லை, ஆனால் அதைப் பிரித்தெறிகிற சாமர்த்தியமுண்டு, இதோ பார்!" என்று அதன் கூட்டைப் பிய்த்தெறிந் தது. ஆதலால், கீழானோர்கட் குபதேசிக்கலாகாது'

என, முதலை ' அன்பனே ! நான் குற்றவாளி யென்பது மெய்யே, ஆயினும் பழைய சிநேகிதனாதலால் உன்னைக் கேட்கிறேன் ' என, வானரம் ' நீ அங்கே போய்ப் பகை யாளியோடு போர்செய் ; மடிந்தாற் சொர்க்கமடைவாய், வென்றால் வீடடைந்து சுகமுறுவாய். முன் ஒரு புத்தி சாலி உத்தமனுக்குக் கும்பிடும், சூரனுக்குப் பேதமும், காரியகாரனுக்குத் தானமும், ஈடானவனுக்குத் தண்டமுஞ் செய்தாற்போலச் செய்யவேண்டும் ' என, முதலை ' அஃதெங்ஙனம்? ' என, சுமுகன் சொல்லும் :

## கதை - 8

' இமமலையின்மேல் சதுரனென்னும் ஒரு நரி பசி யுடனே அங்கங்கே திரியுங்கால் ஒரு செத்த யானை யைக் கண்டு, அதன் தோலைக் கிழித்து இறைச்சியைத் தின்னும் வல்லமை தனக்கின்மையால் அது அங்கு உட் கார்ந்திருக்கையில், அங்கே வந்த சிங்கத்தைக் கண்டு தண் டனிட, அது " நீ யார்? " என, நரி " நான் தங்க ளடியேன், தாங்கள் அடித்த யானையைக் காத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறேன் " என, சிங்கம் " இது நான் கொன்றதன்று ; வேறொருவன் கொன்றெறிந் தானோ, அன்றித் தானாக மடிந்ததோ, எப்படி யிருந் தாலும் அதை நான் புசியேன், இது உனக்கு வேண்டு மானால் எடுத்துக்கொள் " என, நரி " சுவாமி! இது யோக் கியந்தான், பெரியோர்கள் தம் ஆண்மையாலே சம்பாதிக் கிறார்கள் " என, சிங்கம் அதைக் கேட்டு வேறொரு வனத் திற்குப் போயிற்று. பின்னும் அங்கேவந்த ஒருபுலியைப் பார்த்து, நரி " அம்மான், நீ இக் காலன் முகத்தில் ஏன் எதிர்ப்பட்டாய்? இவ் யானையைக் கொன்ற மிருகேந்தி

ரன் 'இங்கே யாதேனுமொரு புலிவந்தால் அதற்குத்தெரியாமல் எனக்கு வந்து சொல்லுவா யானால் நான் அதைக் கொன்றெறிவேன்; ஏனென்றால், நான் முன்னே ஒரு யானையை யடித்து மூழ்கப்போன விடத்தில் ஒரு புலி அதை எச்சிற் பண்ணிற்று; அதுமுதலாகப் புலியைத் தேடிப்பார்த்தும் அகப்படவில்லை' என்று என்னுடன் சொல்லி யிருக்கின்றான்" என, புலி அச் சிங்கத்தின் உத்தரவைக் கேட்டு மிகவும் பயந்து, "மருமகனே, எனக்குப் பிராணதானங் கொடு" எனச் சொல்லிக்கொண்டே யோடிப்போயிற்று. மறுபடி ஒரு வானரத்தைக் கண்டு, முன்னே வந்த துஷ்டனைக் கும்பிட்டுப் போக்கினோம், இரண்டாமவனைப் பேதித்தோம், இப்போது இதன் கையால் இதைக் கிழிப்பிக்க வேண்டுமென் றிப்படித் தன்னுள்ளே நிச்சயித்துப் பின்பு, "வானரா! நீ நெடுநாளைக்குப் பின்பு வந்தாய், மற்றும் பசித்திருக்கிறாய், ஆதலால் எனக்குச் சிங்கங் கொடுத்த இவ் யானை யிறைச்சியை நீ கொஞ்சந் தின்று சிங்கம் வருவதற்குமுன்னே சீக்கிரமா யோடிப்போ" என, குரங்கு அதைக் கேட்டு யானையைக் கிழிக்க, அதைப் பார்த்து நரி, "வானரா! சிங்கஞ் சமீபத்தில் வந்தது, இனி நீ விரைவி லோடிப் போ" என, அதைக் கேட்டுக் குரங்கு பறந்தது. பின்பு அது பிளந்தவிடத்தி லிருந்த மாம்ஸத்தை நரி தின்னுகையில் அங்கே வந்த வேறொரு நரியைச் சண்டையிட்டுத் துரத்தித் தான் வேண்டுமட்டும் இறைச்சிகளைத் தின்றது. ஆதலால் நீ அம் மகரத்தைக் கொன்று உன் வீட்டிற் சுகமா யிரு. வேறொரு தேயத்திற் சௌக்கியமெல்லாங் கிடைக்குமாயினுந் தனக்குச் சிநேகன் அங்கொருவனும் இல்லாவிட்டால் சித்திராங்கன் போற் றீங்

குக ளனுபவிக்க வரும்' என, முதலே 'சித்திராங்கனுக்கு எப்படி அவஸ்தை நேரிட்டது?' என, வானரஞ் சொல்லும் :

## கதை - 9

அயோத்தியா நகரத்தி லிருந்த சித்திராங்க னென்னும் ஒரு நாய் பஞ்சத்தினுற் சோறு கிட்டாமல் மறு தேயத்திற் சென்று ஒரு கிருகஸ்தன் வீட்டுக்குப் போய் அவ் வீட்டுக்காரி சோறுபோட்டு ஆதரித்ததனுல் அன்று முதல் வெகுநாள் வரைக்கும் அங்கே யிருந்து ஒருநாள் சகசமாய் வீட்டுக்கு வெளியே வந்தது. வந்தவுடனே அவ்வூர் மற்றை நாய்கள் இதன் மேலே விழுந்து அநேக விடத்திற் கடித்து அதன் உதிர மாம்சங்களை வெளிப் படுத்தினதனுற் சித்திராங்கன் மிகவுந் துக்கமடைந்து என்ன பஞ்சம் வந்தாலுஞ் சுவதேசத்தை விட்டு வரலாகாதெனத் தனக்குட் டேறி மீண்டும் அயோத்திக்கு ஓடி வந்தது. அப்பொழுது அதற்கு உறவாகிய நாய்கள் "சித்திராங்கா! அத் தேயம் எப்படி யிருக்கிறது?" என, சித்திராங்கன் "அத் தேயஞ் செழிப்பா யிருக்கின்றது, மாதர்களும் தயாசாலிகளா யிருக்கிறுர்கள், ஆனுல் சுவசாதி மித்திரத்துவ மில்லை. ஆதலால் இந்த அவஸ்தை நேரிட்டது" என்றது. ஆனதுகொண்டு தன்னிடத்தி லிருப்பதுபோலச் சுகம் வேறில்லை யென்கின்றேன்' என, முதலே அவ் வார்த்தைகளைக் கேட்டுப் போய் அவ் வண்ணமே எதிரியுடனே பொருது தன் வீட்டை மீட்டுக் கொண்டு அங்கேயே வாழ்ந்திருந்தது. ஆதலாற் பராக்கிரமத்தினுற் பாக்கியம் வழிதேடி வந்தடைகின்றது."

## ஐந்தாவது

# அசம்பிரேக்ஷிய காரித்துவம்

சோமசருமன் அரையன் மக்களை நோக்கி, "யாவ னொருவனுடைய தீச் செயல்களைக் கண்ணுற்றுபினுஞ் செவியுற்றுபினும் அறிவுடையோன் அதைப் புரிய லாகாது. அங்ஙன மாகையில் வெள்ளறிவ னென்னும் பெயரிய ஒரு மயிர்வினைஞன் மணிபத்திர னென்போ னது கருமங் கண்டுழித் தேறுமல் அங்ஙனம் புரிந்து இட ருற்றனன்" என, அதைக் கேள்வியுற்ற இளங் குமரர் "அஃதெவ்வாறு? இயம்புதி" என வினவ, ஆசி ரியன் உரைப்பான்:

"அவாசிக் கண்ணதாய பைடணபுரி வாசியாகிய மணிபத்திர னென்போன் நன்னெறி பற்றி யொழுக லான் உளதாய நல்குரவாற் பரிபவமுற்று, இவ் வறுமை கெட்டது, சீச்சீ! தயை சாந்தி முதலாகிய குணங்கள் பொருளில்லாதா ரிடத்தில் விபரீதமாகத் தோன்று கின்றன என்று கணந்தோறும் ஆகுலித்து, குடும்பப் பாதுகாப்பின் ஏக்கத்தினுல் அறிவு மழுக்க மடைகின் றது, தானிய முதலிய பொருளிலான் வீடு இடுகா டொக்கும், அவன் கல்வி முதலிய குணச்சிறப் புற்றே னுயினும் மனித ரெண்ணிக்கையி லுருன், இங்ஙனம் பலவகைத்தாய கவற்சி மிடிமையினு லெய்துகின்றது, ஆதலால் பட்டினியிருந்து உயிர் துறப்பல் எனத்

துணிந்து கண்வளர்ந்தான். பதுமநிதி நீத்தோன் வடிவமாய் அவன் கனவி லடைந்து, 'யான் உன் ஒழுக்கத்தால் கட்புலனாக நாளை இவ்வுருவத்தோடு வருவேன், அப்போழ்து என் சென்னிமேற் றண்டத்தாற் புடைப்பையாயின் யான் குன்றாப் பொற்குவையாவேன்' எனக் கேட்டு, அவன் துயிலொழிந்து, இக் கனவு உண்மையோ, அன்றேல் இஃதெப்போழ்தும் எனக்கு உளதாய பொருட்சிந்தையின் தோற்றமோ என் றிங்ஙனம் மறுநாட் கருதிக்கொண் டிருக்குங்கால், இரவிற் கண்டாங்கு வந்த அந் நீத்தோனைக் கண்டு, நிகழ்ந்த கனவு மெய்யெனத் துணிவுற்று, அவன் சிரமேல் ஓர் தண்டங்கொடு தாக்க, அவன் பொன்மயமாய் ஒளிவிட்டு நின்றமையால், ஒன்றிற் பொதிந்து வீட்டில் வையாநிற்புழி, அவன் இல்லாட்கு நகங் களைந்துகொண் டிருந்த மயிர்வினைஞனை நோக்கி, 'உனக்குச் சிறிது அருத்தந் தருவேன், இவ் வற்புதத்தை எங்கணுஞ் சிறிதும் புலப்படுத்தற்க' என வற்புறுத்தி விடுக்க அவன் 'அந் நெறி நிற்பல்' என மேற்கொண்டு வீட்டிற் சென்று அறிவின் சிறுமையால் தன்னுள் ஆராய்வானாயினன். வைகறையில் ஒரு துறவியை யழைத்து வந்து அன்னோன் மண்டையிற் கோல்கொண் டறையின் அவன் சுடர்விரி பசும்பொன் னாவன் எனத் தேறி, மற்றைநாள் துறவிகள் குழுவிற் சென்று மிக வணங்கி, 'நீவிர் எத்திறத்தோர்க்கும் அறிவுணர்த்திக் கரையேற்றுநிற்கின்றனீர், மற்றும் எவ்வெவர் இல்லத்தும் பிச்சைக் கேகாநிற்கின்றீர், ஆதலால் இத் தினம் நாயினேன் சிறு குடிலுக்குத் தேவரீர் திருக்கூட்டத்தோடு எழுந்தருள்வீராக' என, அவர்களிற் றலைவன் இம்

மாசுதீர்ப்போனை நோக்கி நாடோறும் அந்தணர் உன் மனைக்கு வாராநிற்க, நீ இற்றைக்கு எமக்கு என் இயம்புகின்றனை? அவ் வேதியரையே யழையாய்' என, அக்காலை நாவிதன் 'நும்மாட்டுப் பேரறச்செயல்கள் இருக்கின்றமை யான் அறிகின்றேன், ஆதலால் நீவிர் என் வேண்டுகையை எட்டுணையும் மறுமற் றிருவுளம் வைத்தருள்வீர்' எனப் பணிவாக மொழிந்து, அவன் கரத்தைப் பற்றி இல்லிற் கொடுவந்து அம் முனி யின் கபாலத்தில் உலக்கையாற் சாத்தினவளவில் அவன் களைத்து நிலத்தில் அடியற்ற பனைபோல் வீழ்ந்தனன். இதற்குட் டபசிக்குழாம் வந்து மெய்ம்மறந்து கிடக் கின்றவனைப் பார்த்தவளவிற் பேரிரைச்ச லிட, இக் கலி பலியை அவ் வூராள்வோன் காவலாட்கள் கண்டு ஆண்டு எய்தி, அந் நாவிதனைப் பிணித்துத் தந்தலைவன்பாற் கொடுபோய்விட, அவ்வூராளி மஞ்சிகனை நோக்கி, 'இஃ தென் செய்தனை?' என உறுக்கி வினவ, அம் மங்கலன் 'மணிபத்திர னகத்துக் கண்டாங்கு யான் செய்தனன்' என, அத் தலைவன் அவ் வணிகனை விளித்து, 'உன்பால் நிகழ்ந்த தென்னையோ?' என, அவன் ஒன்றும் உரை யாதிருந்தனன். அதன்மேல் அதிகாரத் தலைவன் அம் பட்டனைப் பார்த்து, 'இவன் ஆராயாமல் இக் கருமம் புரிந்தன னாதலால் இவனைக் கழுவேற்றுக. இங்ஙனம் முன் ஒரு பார்ப்பினி பராமரிசியாம லியற்றின கருமத் தால் கீரியைக் குறித்து ஆகுலித்தாள்' என, மணி பத்திரன் 'இஃதெங்ஙனம்? அருள்வாய்' என, அவ் வூராளி சொல்வான்:

## கதை - 1

'உச்சயினிபுரத்தில் வதிந்த தேவசாம வேதிய னொருவன் மனையோடு இல்லற நடாத்து நாளிற் குழவி யில்லாக் குறையால் இருவரும் ஒரு கீரிப்பிள்ளையை மைந்தனைப் போற் கருதி வளர்ப்புழி ஒரு மக வுண்டாயிற்று. மனைவி அம்மதலையை ஓர்நாட் டீங்குவித்துக் கணவனைப்பார்த்து, " யான் உதகத்தின் பொருட்டுச் செல்லா நின்றேன், நீர் நங் கான்முளையைப்பார்த்திரும், ஒருவேளை கீரிகடிக்கும்" என் றிங்ஙனம் வகுத்துத் தண்ணீர்க்குச் செல்ல, பின்னர் அக் குழந்தை தொட்டிலிற் கண்வளர்ந்தது. அவ்வந்தணனும் ஒரு தடாக்கரும வயத்தனாய்ப் புறஞ்செல்ல, அத் தருணத்தில் ஒரு கிருஷ்ண சருப்பம் பிலத்தினின்றும் புறம்போந்து தொட்டிலின்மேற் செல்லாநிற்கக் கண்ணுற்ற நகுலம் அதை அக் கணமே விரைந்து பற்றி உதறிக் கொன்று பல கண்டங் கண்டு குருதியாற் பூசுற்ற முகத்துடனே தனது ஆற்றலைக் காட்ட விரும்பி விரைந்து துவாரமுகமாக வருகையில், வந்த பார்ப்பினி செந்நீரால் நிறைந்த அதன் வதனத்தைப் பார்த்தவளவில் அது தன் பிள்ளையைக் கடித்து மடித்ததென்று உள்ளித் துள்ளித் துணுக்குற்று நீர்க்குடஞ் சிதைவுறும்படி அதன் தலைமேற் போட்டுக் கொன்று உடனே உட்புகாநிற்கையில், மகன் உறங்குதலையும் அருகே கரும்பாம்பின் துணிக்கைக் குவையையுங் கண்டு, அந்தோ! கெட்டேன், யான் என் அருங் குழவியை நன்காராய்வின்றிக் கொலைசெய்தே னெனச் சோகமுற்றுப் புலம்பாநிற்புழி அவள் தலைவன் ஆண்டு எய்தி, " குழந்தை இதோ விருக்கையில் நீ வெறுமையென மகவிழந்தே னென்

றேன் கதறிக் கலுழ்கின்றனை? என்னடி பேதாய்!" என, மனைவி "நீர் யாதோ பேரவாவால் என் மொழி தள்ளிப் போனமையால் அதன் பயன் இதோ வாய்த்தது; இது மிக்க அவாவினன் முடிமேற் சக்கிரஞ் சுழன்றதை யொத்தது" என, அவன் "அஃதெவ்வணம்? உரைத்தி" என, உரைப்பாள்:

## கதை - 2

"அமராவதி நகரத்து இன்புற்றிருந்த வேதியர் நால்வர் மிடியாற் றுன்புற்று, இப்போழ்து யாம் அடைந்த பொருளின்மையை இன்மையாக்கும் இடம் நாடிச் செல்வேமாக, பொருளில்லார்க்கு வனநடு வதிதலினும் இன்பிலையென் றிங்ஙனங் கடைப்பிடித்து நால்வரும் மறு தேயம் போகாநிற்கையில், க்ஷிப்பிரா நதிக்கரை யணித்தாகப் பைரவாநந்தி யென்னும் யோகி யொருவன் எல்லாம் வல்லோனாய் வீற்றிருக்கின்றன னென அறிந்து, அம் மடத்தில் அவனுழைச்சென்று இயன்றமட்டும் பூசிக்க, அத் துறவி இவர்கள் வழிபாட்டிற் கிரங்கி 'உம் வரவின் காரண மேது?' என, அவர்கள் 'அடிகளே! எம்மை நலிகின்ற நல்குரவைத் தொலைப்பான் மிக்க பொருள் விழைவால் எம் நாடு துறந்து புறம் போந்தனம்; பொருட்குவை துணிவின் செய்கையா லன்றி எய்துவதன் றாதலின் இதன் நிமித்தஞ் சாந்துணையும் முயலவேண்டு மென்று துணிந்து ஈண்டு நுஞ் சரணடைந்தேம்; இனித் தேவரீர் எம் விழைவை முடிப்பீர், மறுப்பீரேல் எம்முயிரை நும்பால் விடுக்குதும்' என, யோகி இவர்கள் பரபரப்பையுங் கடைப்பிடியையும் உணர்ந்து, நான்கு சித்தியைச் சிந்தித்து அன்னோரை

நோக்கி, நீவிர் இமயகிரி நெறிபற்றிப் பிசகாது போமின், போவுழி எவன் வர்த்தி யாண்டு விழுமோ அவற்கு ஆண்டுச் சித்தியாம்' என்றுரைத்து அவர்கள் தலைமீது நான்கு திரிச்சீலைகளை வைத்தபின், அப் பொன்விருப் போர் அங்ஙனம் அவராணையைச் சிரமேற் றாங்கி இமய மலை யிடத்திற் போகச் சிறிதாறு கடக்கையில் ஒருவன் வர்த்தி வீழ்ந்தது. அக்காலை அன்னவன் அங்குத் தொட்டுப் பார்ப்புழித் தாமிரக்கனியா யிருக்க, அவன் தனைவிட்டு நடந்த ஏனையோரை நோக்கி, 'மித்திரரே! நும் அவாக் கெடத் தாமிரங் கொண்மின்' எனக் கேட்டு, மூவரும் 'பேதாய்! இதனால் என்ன பயன்? இஃதெத் துணைபெறினு நம் மிடிமை எட்டுணையும் அகலாது; ஆதலால் யாம் முன் செல்லுதும்' என உரையாடி முற் செல்லாநிற்க, அவன் தன் ஆற்றலளவு செம்பு வாரிக் கொடு வந்த நெறி சென்றனன். பின்னர் முன்னர்க் கூறிய அம் மூவரும் ஒரு கூப்பாடு செய்மை போவுழி அங்கு ஒருத்தன் தலைத்திரி வீழ, அவன் அங்ஙனந் தொட்டு மற்றோரை நோக்கி, 'இவ் வெள்ளிகளைக் கைக் கொடு மீள்வேம்' என, அவ்விருவரும் 'முற்படப் பொற்குவை யிருக்கு மாதலால் யாம் போகுதும்' என, அவர் போயபின் அவனும் வெண்பொன் னிராசி யிற் றன்வலிக் கியன்றன சுமந்து சென்றனன். பின்பு அவ்வெஞ்சிய இருவரும் நடக்கையில் ஒருவன் சிரத்திரி நிலத்தில் வீழ்வுற, அவன் தோண்டிக் காண்புழிப் பொற்றிரள் இருந்தமையால் அவன் களிப்பின் பெருக் கில் அமிழ்ந்தினவனாய், 'நண்பனே! நம் இச்சைமட் டுஞ் சொன்னத் திரட்கொடு செல்லுதும் வருதி' என, அப் பேராசைப் பேதை 'அறிவிலாய்! முன்னே

மணித்திர ளிருப்பனவாம், ஆதலால் நான் செல்வல் என, பின்பு அவன் 'யான் இச் செம்பொன் ஏற்றுக் கொண்டு உன் வர ஞேக்கிக்கொண் டிருப்பல், நீ விரை வில் வருதி' என, 'அங்ஙனம் ஆக' என்றகன்று வெயி லின் வருந்திப் பசி நீர் வேட்கையாற் சித்தி நெறி தப்பி இவன் அவண் உழல்கையில், அங்கொரு மனிதன் தலையில் ஒரு சக்கிரஞ் சுழலவும் அவன் உடலெங்குஞ் செந்நீரால் மூழ்கியிருக்கவுங் கண்டு அவனை நோக் குற்று, 'நீ யாவன்? உன் தலைமேல் இந் நேமி சுழல்வ தென்னை?' என் றிம் மாற்றம் வினயவளவில் அவ்வாழி இவன் உச்சிமீது வந்திருந்தது. இவன் துணுக்குற்று, இஃதென்னை? கிணறு வெட்டப் பூதம் புறப்பட் டாற்போலாயிற் றெனக் கவலையுற்று, 'இந் நேமி என் மத்தகத்தின்மீ துறுவதென்னை?' என,

முன் சக்கிரி: 'இதுகாறும் எனக்கு அநுபவமிருந் தது; இக் காலையில் மற்றொருவன் சித்தித்திரியோ டெய்தி உசாவுவன், அப்போழ்து இவ்வாழி அவன் தலையைப் பற்றிக்கொளுமென் றெனக்குக் குபேரன் வர மிருக்கின்றது' என

சக்கிரத்தலைப் புதியோன்: பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்ததுபோல் எனக்காயிற் றென்று தன் னிற் கவன்று நெட்டுயிர்ப்பெறிந்து, பண்டைய நேமித் தலையனை நோக்கி, 'நீ இங்கெய்தி எத்துணை நாளாயின? விளம்புதி' என

முன் சக்கிரி: எனக்குக் காலவரையறை தெரியாது, இராமன் அரசியற்றுங் காலையில் நான் மிடிபட்டு இங்கு இச் சக்கிரத்தாற் பிடிபட்டனன்' என,

வேதியன் : அதைக் கேட்டு, ஈங்கு வல்சி நீர் தரு பவ ரெவர்? என

பூர்வ சக்கிரி : 'பசி தாகம் இவ்வுழி வருத்துத லில்லை, முழுதும் இத் துன்பே நுகரவேண்டும், இது நிதிக்கோன் நிதியைக் கவர்வான் வருபவர்க்கு அச் சுறுத்தும்பொருட்டு வைத்திருக்கின்றது. இவ்வச்சத் தால் யாவரும் இங்கு வாரார்' என் றிங்ஙனம் நிகழ்வன யாவுஞ் சொல்லி, 'இப்போழ்து என் மெய்க்கு ஆற்றப் பெருத வேதனை யுளதாயிற்று; ஆதலால் நான் செல் வல்' எனச் செல்வுழிச் சென்றனன்.

பின்னர் முற்கூறிய சுவர்ணசித்தி, சொல்லியாங்கு நெடுநேரம் இவன் வருநெறி நோக்குற்றிருந்துங் காணு மையாற் றேடிவந்து இவன் சென்னியிற் சக்கிரஞ் சுற்று கின்றமை கண்டு ஐயுற்று அருகெய்தி, 'நண்பனே! இஃதென்னை! என்னை!' என, அவன் 'இது பேராசை யின் பயன்' என, சுவர்ணசித்தி, ஓகோ! இது பிள்ளை வரத்துக்குப் போனவிடத்திற் புருடனைப் பறிகொடுத் தாற்போ லாயிற்றே எனச் சற்றுக் கலங்கிப் பின், 'வெள் ளறிவோர்க்குக் கல்விப்பயிற்சி சிறிதுளதாயின் பிறனறி வைக் கேளாது செத்த சிங்கத்தை யுயிர்ப்பித்தவர்போற் கேடுறுவார்கள்' என, அதைக் கேட்டுச் சக்கிரதரன் 'அஃதெங்ஙனம்?' என வினவ, பொன்வாய்ப்பினன் இறுப்பான் :

## கதை - 3

துளசாபுர மென்னும் மூதூரில் நால்வர் ஒருசாலை மாணுக்கராய்க் கல்வி பயில்கையில், அவர்களில் மூவர்க்கு மந்திரவித்தை கைவர, அப்போது அவர்கள் "அரசனை

யடுத்துப் பெரும்பொரு ளீட்டுத லன்றோ வித்தை யுணர்ச்சிக்குப் பயன்!" என, அதுகேட்டு அவருள் ஒருவன் "வாருங்கள், நம்முள் இவ் வொருவன் கல்வி யறிவிலன், இவற்கு ஈட்டும் நம் பொருளிற் கூறு கொடேம். ஆதலால், இவன் இந் நொடியிற்றானே தன் இல்லத்திற் கேகற்பாலன்" என, அதைக் கேட்டு மற் றொருவன், "இவன் கல்வி கல்லானாயினும் இளமை தொட்டு நம்மோடு விளையாட் டயர்ந்தோ னாயினன், அன்றியும் நம்மினும் உலக நடையிற் றேர்ந்தவன், அர சன் மாட்டு உலகநடை யறிந்தவனினுங் கல்வி மாத்திரம் பயின்றோன் புகழெய்தான், ஆதலால் இவற்கு நாலி லோர்கூறு கொடுக்குதும்" என, அதை எவரும் ஒப்பிப் பின்பு நால்வரும் வேற்றுத் தேயம் நோக்கிப் போவுழி, அங்கே ஓ ரடவியில் உயிர்நீத்த அரிமாவொன்று கிடந்த மை கண்டு, ஒருவன் "நாம் பிழைப்பிக்கக் கற்ற வித்தை யை இவ்விறந்ததன்பால் இயற்றித் தெளிவோம்" என, அதை உலகநடைவல்லோன் கேள்வியுற்று, "இவ்வரி மாவைச் சீவிப்பிப்பின் இஃதெல்லோரையுந் தின்னாது விடாது; இதன்பாற் பரீக்கைசெயல் ஒழியற் பாலது" எனப் பலவகையால் மறுத்தனன். அம் மூவரும் அந் நன்மொழியை யெறிந்து செருக்கினால் அச் சிங்கத்தை யுயிர்ப்பிக்கத் தொடங்க, மற்றவன் "இத் தருதியில் செயற்குச் சதுரனாவான் சேய்மையாகற் பாலன்" என்றுரைத்து, நீளப் போய் ஒரு நெடுமரத்தின் மிசை யிருக்க, பின்னர் இவர்கள் அம் மற விலங்குக்கு உயிர் தந்த மாத்திரத்தில் அது மூவ ராவியையும் வாங் கிற்று. ஆதலாற் கல்வியினும் அறிவு பெருமையது' என, அப்போது சக்கிரி 'இது காரணமன்று; அறி

வுடையோன் வீட்டிற பல காபபு அமைதநிருப்பினும் நாசமுறுகின்ருன்; பேதையாயினுன் காட்டகத்திற் றனித்திருந்தும் உய்கின்றனன்; முன் ஆயிரம்புத்தி மல்லாந்ததையும், நூறுபுத்தி தொங்கினதையும், ஒரு புத்தி நீரில் விளையாட் டயர்ந்ததையுங் கேட்டிலையோ? ' என, பொன்வாய்ப்பினன் ' அஃதெவ்வாறு? அறைதி ' என, நேமிதிரிதலையன் விடை விடுப்பான்

## கதை - 4

' மகத தேயத்தில் ஒரு மலர்ப்பொய்கையில் அறிவா யிரத்தன், நூறறிவன் என்னு மிரண்டு மீனங்கட்கும் ஓரறிவ னென்னுந் தவளைக்கும் நட்புளதா யிருக்குங் காலையில், ஒரு திவசம் ஆண்டு வலையனொருவன் வந்து, " பிற்றை ஞான்று ஈண்டுள கொழுமீன்களை வலையெறிந்து கவர்வேனாக " என் றுரைகூறி யிறந்தமையை யறிவுற்ற அம் மண்டூகம் தன்னுற்ருர்க் கறிவுறுத்துழி, அறிவா யிரத்தன் " நான் நீர்நடை பலவுங் கற்று வல்லேன் " என, நூறறிவன் " யாம் நிலைபெயர லாகாது, யாது ஆகற்பாலதோ அஃதீண்டே யாகுக " என, அதைக் கேட்ட தவளை " வாரீர் நட்டோரே! நான் இதோ போகின்றேன், நீவிரும் நடமின் " என, அவ் விரண்டும் " நீ ஓரறிவ னாகின்றனை, ஆதலாற் போவையானுற் போ, யாம் வருவே மல்லேம் " என, பின் அத் தவளை தன் குழுவோடு வேறிடம் போயிற்று. மறுநாள் செம்படவன் வீசிய வலையிற் சிக்கிய பற்பல மற்சியங்களோ டகப்பட்ட அறிவாயிரத் தனைத் தலைமேற் சுமந்தும், நூறறிவனை வாலைப் பற்றி யும் நடக்கையில், இதை ஓரறிவன் கண்டு தன் பெண்

டிரை நோக்கி, "அறிவாயிரத்தனுக்கும் நூறறிவனுக்கும் இங்ஙனங் கேடெய்திற்று, நான் ஓரறிவன் நீரில் விளையாடுகின்றேன்" எனக் குதூகலத்தோடு சொல்லிற்று. ஆதலால், மிக்கறிவோனுக்கும் ஊழினால் இவ்வணந் துன்புளதாம்' என, பொன்வாய்ப்பினன் 'நீள் செவியன் நன்மதி தடாநிற்கையில் இசைபாடிக் கட்டுண்டாற்போல் உனக்கு இப்பேரிடர் உளதாயிற்று' என, சக்கிரதரன் 'அஃதெங்ஙனம் நிகழ்ந்தது? உரை' என, சுவர்ணசித்தி சொல்லுவான் :

## கதை - 5

'நெடுஞ்செவியன் சுமதி யென்னுங் கழுதை நரிகளிரண்டும் இடைவிடாமல் ஊரினர் பைங்கூழை மேய்ந்து வனத்திற் றங்குழி, ஒருநாள் விலாப் புடைக்கத் தின்று இரண்டுந் தேக்கெறிந்து குந்தியிருக்கையில், நெடுஞ்செவியன் "இந் நிலவெறிக்கும் இரவில் எனக்குப் பொழுது கழிவின்று, ஆதலால் யான் கானஞ்செய்வேன்" என, சுமதி "நீள்செவியா! நீ பாடற்க, உழவர் உன் குரலைக் கேட்டுத் துயிலொழிந்து உன்னைப் புடைப்பார்கள், மௌனமா யிரு" என, நீள்செவியன் "உனக்கு இவ் விசையைக் குறித்து உணர்வின்மையால் என்னைத் தடுக்கிறாய்" என்று அந் நரியை வைது தன் பெருங்குரல் முழுதுந் திறந்து பாடிற்று. அப்போழ்து அவ்வுழுநர் விழிப்புற்று அக் கழுதையைக் குண்டுருட்டாய்ப் பிணித்து நையப் புடைத்தனர். நரி அதைக் கண்டு "மாமா! என் மொழி தள்ளி இசை பாடினமையால் இப் பயன் அடைந்தனை" என்று இகழ்ந் துரைத்தது' என, சக்கிரதரன் 'நன்மொழி வின

வியும் மந்தரனென்னுந் தந்துவாயன் மரணமுற்றனன் என, பொன்வாய்ப்பினன் 'இஃதெவ்வண முளதாயிற்று? இயம்புதி' என, சக்கிரி சொல்லுவான்:

## கதை - 6

'நாராயண நகரத்தில் மந்தரனென்னுந் தந்துவாயன் பல்வகைப்பட்ட வத்திரம் நெய்து வரும் ஊதியத்தால் மனைவியோடு உண்டுடுத்துக் காலந்தள்ளி வருகையில், அவன் தறி முறிந்தமையால் மரம் வேண்டிற்றுக் காட்டிற் புக்கானாகித் திரியாநிற்கையில், ஒரு பெரிய வாகையைப் பார்த்து வெட்டத் தொடங்குழி, அதன்மேலிருந்த யக்ஷன் "இவ் வென்னிடத்தை வருத்தாதே, நீ விருப்புற்றதை வெறுப்பின்றித் தராநிற்பேன்" என, சாலியன் "நான் என் இல்லம் புகுந்து எவரையும் உசாவி அவர் சொன்னவண்ணங் கேட்பேன்" என்று அவ்வண்ணம் வீடுநோக்கி வருங்கால், நெறியில் எதிர்ந்த மித்திரனைய நாவிதனை, "என் செய்வது? இயம்புதி" என, அன்னோன் "நீ இராச்சியங் கேள், நீ அரசும் நான் அமைச்சு மாவேம்" என, அதைக் கேட்டபின் அந் நடந்த செய்தியைத் தன் மனைவியாகிய சாலிச்சிக்குத் தெரிவிக்க, அம் மடந்தை, "இராச்சியத்திற்கு வரம்பில் இடையூறுகள் இருக்கின்றன வாதலால், அது கேட்கற்பாற்றன்று; வேறொரு வதனமும் இரு கரமுங் கேட்டுப் பெறுவையாயின் திவசத்திற்கு இருசீரை நெய்தால் நம் இல்வாழ்க்கை செவ்வன் நடக்கும்" என, அதை மேற்கொண்டு மீட்டும் அவ் வனத் தரு வருகிற்சென்று அவ்வியக்கனை நோக்கி, "எனக்கு மற்றோர் சென்னியும் ஈரத்தமுந் தருதி" என, அவன் "அங்ஙன

மாக" எனச் சொல்லியவளவில், வினையவாறு அடைந்து உவப்பெய்தித் திருமிக் கிருகத்திற்கு வருகையில், மாக்கள் இவ் விபரீதத்தைக் கண்டு இஃதோர்இராக்கதனென்றெண்ணுற்றுத் தலையால் ஒரு கல்லெறிந்து கொன்றனர். ஆதலால், வரற்பாலது பிழையாதென்று உணர்வுற்று வல்லோர் வீணாசை கொள்ளார். அங்ஙனம் வீணெண்ணங்கொடு கிருபணனென்போன் கேடுற்றனன்' என, சொன்னசித்தி 'அஃதெவ்வாறுயது? இயம்புதி' என சக்கிரதரன் சாற்றுவான் :

## கதை - 7

பண்டாரபுரத்திற் கிருபணசருமனென்னும் வேதியனொருவன் இரந்து வயிறு நிரப்பி எஞ்சிய தவசங்களைப் பெய்து நிரப்பிய பானையைச் சிக்கத்தின்மீ திருத்தி அதனடியிற் படுப்பன். இங்ஙனம் ஒழுகுகையில் ஒரு நாள் கிடந்தவாறே, சிறுவிலைக் காலமெய்தின் இப் பண்டம் விலைப்படுத்தி அப் பொருட்கு ஒரு காராடு கொண்டு அது பல்கியபின்னர் அவற்றை ஆவிற்கு மாற்றி அவ்வாப் பெருகியபின்னர் அவற்றிற்கு ஈடாக வாம் பரி கொள்வேன்; பின்பு அப் பரி குட்டிகள் ஈன்று விருத்தியாயபின் அவற்றை விற்று யான் செல்வமுடையனாவேன்; பின் ஒரு பார்ப்பனக் கன்னிகையை நாடி மணம்புரிவேன்; அம் மாதகட்டு ஓர் மகவுளதாம்; அது தவழ்கையில் யான் பெண்டிரை நோக்கி, அடி பெண்ணே! குழவியை யெடுவென்பேன்; அவள் பணியூற்றத்தால் எடாள்; அப்போழ்து யான் அவட்கு இங்ஙனம் ஒருதை கொடுப்பல் என இங்ஙனம் எண்ணமிட்டு ஒருதை யுதைக்க, அவ்வுதை அரிசிப்பானையிற் றாக்கி அஃதுடை

பட்டு இருந்த பண்ட முழுவதுங் கொட்டுண்டு இறைந்து பயன்பெறாதாயிற்று. ஆதலால் வீண்கற்பனை கற்பித்த லாகாது' என, அதைக் கேள்வியுற்ற பொன்வாய்ப்பினன் 'உன்மீது குற்றம் யாது? இது பற்றுள்ளத்தின் பெருமை. கிருபணத்துவத்தினாற் சந்திரசேன ராசன் மிகத் துன்புற்றனன்' என, சக்கிரதரன் 'அஃதெங்ஙனமாயது?' என, சுவர்ணசித்தி சொல்லுவான்:

## கதை - 8

அயோத்தியா நகரத்திற் சந்திரசேன னென்னும் அரையன் தன் மகன் வலிமுகத்தோடு ஆடலயர்வதில் மிக்க வேட்கையுற்றமை கண்டு பற்பல வலிமுகங் கொணர்ந்து சாலையில் வளர்ப்பிப்புழி, அங்கு மடையனுக்கும் குற்றேவல் செய்வோர்க்கும் பகை மூண்டமை யறிந்து அவற்றுள் ஓர் சதுரப்பாடுடைய முசு, "இவண் கலாம் நிகழ்ந்திருக்கின்றமையால் இவ்விடந் துறந்து காட்டகம் புகுவேம்" என, அதைக் கேட்ட வானரக் குழு "நீ மூத்தமையால் அறிவிழந்து பலபலபடி பிதற்றுகின்றாய், இங்கு அரையனை யடுத்துப் பல வண்ண உண்டிக ளுண்டு குழீஇ யிருந்தேம். இந் நலத்தை வலிய வீசி வனத்திற் றழைதின் றுழல்வது நன்றன்று. யாதொன்று எய்தற்பாலதோ அஃதிங்ஙனே எய்துக" என, இம் மொழி கேட்டு அக் கிழக் குரங்கு தன் குடும்பத்தோடு வேறிடம் புக்கது. பின்னர் ஒரு நாள் பணிசெய்வோன் மடையனைக் கரத்தண்டத்தால் ஓச்சி யெறிந்தமையால் அவன் அவனை எரிகொள்ளிகொண் டெறிந்தான்; அக் கனற்பொறி வைத்தூற்றிற் பற்றிக் குதிரைச்சாலை யாவற்றினும் மூண்டு அத னகத்துள பரிகளிற் சில எரிந்திறந்தன,

சில உடற் பாதி கரிந்து வீழ்ந்தன, சில கண் முதலிய உறுப்புகள் வெந்தன. இச் செய்தி அரசனறிந்து அக் கணத்திற் குதிரை மருத்துவரைக் கூய், "அவ் வசுவ வேக்காடு ஒழிதற்கு எது செய்யலாவது?" என, அவ் வாமாத்திரர் "குரங்கி னெய்யாலன்றிக் குணமுறாது" என, அண்ணல் உடனே ஏவல்புரிவோர் ஆனனம் ஏறிட்டு "இவ் வானரக் குழுவைக் கொலைசெய்து இப் பண்டிதர் சொல்லியாங்குப் புரிந்து குணமுறுவிமின்கள்" என் றேவ, அவர் அன்னவாறு செய்தனர். இதை அம் முது கடுவன் அறிந்து பெரிதும் வருந்தி, இப் பழி வாங்குவேன் என் றுறுதிசெய்து காட்டகத்துத் திரிதருகையில், வழியில் மிகப் பொலிவுள்ள ஒரு பெருஞ் சரசைக் கண்டு இக் குளத்தகத்து மக்கள் நடப்பின்மையின் இவண் ஒரு பெரும்பேய் இருக்கவேண்டுமென்று உள்ளிச் செய்மைக்க ணின்று ஒரு தாமரைத் தாளைப் பிடுங்கி அதன் நாளத்தினூல் நீரை உறிந்து குடித்தது. இதை ஆண்டு வதிந்த கணம் கண்டு அதினின்று மர்க்கடத்தின் அருகுற்று, "உன் சதுரப்பாட்டை மெச்சி நான் பிரசன்னமாயினேன், இவ்வென் மணிவடத்தை யேற்றுக்கொள்!" எனத் தன் களத்தின் மாலையைக் கழற்றிக் கொடுத்தது. அப்போது குரங்கு பிசாசத்தை, "உதகத்தில் உனக்கு வலி எவ்வளவிருக்கின்றது?" என, அப் பைசாசம் "ஆயிரம்பெயர் ஒருங்கே நீரில் இறங்கினும் அவரைப் புறம்போக வொட்டேன்" என, இதைக் கேட்ட வலிமுகம் "உனக்கு நிரம்ப உணவு கொடுவருவல்" என்று அவ் விரத்தினமாலையைக் கழுத்தி லணிந்துகொண்டு, சந்திரசேன வரையன் பதி புக்கு அவனைத் தரிசித்து, "சுவாமி! உம் சோறு

நெடுநாள் உண்டு வளர்ந்தேன், ஆதலால் உம்மைக் காண வரலாயினேன்" எனப் பணிந்து சொல்ல, அரையன் "இவ் வரதனவடம் உனக்கு யாங்குக் கிடைத்தது?" என, வானரம் "சுவாமி! காட்டில் ஓர் மலர்த் தடம் இராநின்றது, அதில் வைகறையிற் குதிப்பவனுக்கு இன்ன மணிகள் அகப்படுகின்றன" என, அம் மொழி கேட்டுத்தோன்றல் "யான் அங்கெய்துவல்" என, வானரம் "மிகவும் நன்கு" எனத் தாழ, பின் மன்னன் சேனைக்குழாஞ் சூழ வானரத்தின் பின்சென்று அச் சரசின் அணித்திறுத்தான். பின்னர் அக் கங்குல் கழிந்து விடியற்காலையில் சாகாமிருகம் எழுந்து ஏந்தலை யெழுப்பி நோக்கி, "நுமக்கு அரதன விருப்புளதேல் இதுவே நற்பருவம்" எனக்கேட்டு அரையன் காலாட்களோடு தடத்திற் செல்லாநிற்கையில், வானரம் அவனைப் பார்த்து, "எல்லோருந் தடத்தகம் புக்கு மணிகள் வாரிக்கொண் டெய்தியபிற்றை நாம் இருவரும் புக்கு அம் மணிகள் கொள்ளுதும்" என, அவன் "அங்ஙனமாக" எனப் போக்கிய பதாதிகள் வாவியி லிறங்கின மாத்திரையில் அப் பாரிடம் அவர்களை அந் நீரில் அமிழ்த்திச் சேரக் கொன்றது. பின்பு சந்திரசேனன் "சேவகர்கள் சென்று நெடுநேரஞ் சென்றது, இதுகாறும் எய்தவில்லை, என்?" என்று பிலவங்கத்தைக் கேட்க, அது வானுறவோங்கிய ஒரு மாநெடுங்கிளையிற் பாய்ந்தேறி அரசை நோக்கி, "நீ என் குலமுழுதையுங் கொல்வித்தாய், ஆதலால் அக் கடனை நான் இங்ஙனங் கைக்கொண்டேன்; நீ எனக்கு அன்னந் தந்தமைபற்றி

மங் கேட்டைத் தராநிற்குமென்று உள்ளினவனைக் கோயிற் புக்கனன். அங்ஙனமாய கருமம் நீ புரிந்தமையால் அஃதுனக்கு இத் துன்பம் பயந்தது. நல்லது, இனி யான் ஏகுவன்' என, அப்போழ்து சக்கிரதரன் 'குறைவுற்ற காலையில் நட்டோர் பயன்படுகின்றார்கள். அங்ஙனமாக, நீ எற்றுறந்து எவ்வா றகலுதி?' என, சுவர்ணசித்தி 'கள்வன் இராக்கதனைப் பிடிப்புழி வானரம் பேசினமையால் அது பிடிபட்டது, ஆதலால் நான் இவ்வாழியை யஞ்சுகின்றேன்' என, சக்கிரி 'இஃதெங்ஙனம்?' என, பொன்வாய்ப்பினன் சொல்வான்

## கதை - 9

மதுரைப்பதி காவலனாகிய பத்திரசேனக் கோமானுடைய இரத்தினவதி யென்னும் பெயரிய கட்டழகியாகிய மகளைக் கவரக் கருத்துற்று ஓரிராக்கதன் போந்து அற்றம் நோக்கிச் சின்னாட் டிரிவுற்று அவ்வுபாய நடவாமை கண்டு ஒருநாட் பதிவிருக்க, அக் கன்னிகை அது கண்டு அடுத்து நின்ற தோழிமுகம் நோக்கி, 'உயிர்ப்பாங்கி! இவ் வரக்கன் என்னை எல்லு மெல்லியும் வருத்துகின்றனன். இதற்கு ஏதேனும் ஓர் சூழ்ச்சி செய்ய வேண்டுவல்' என, அது செவிபுக்க இராக்கதன் இம் மாதைக் கவரும்பொருட்டு யாம் வந்திருக்கையில் இவ் வெண்ணங் கொண்டே எம்மினும் வலிய மற்றொருவன் வந்திருந்தால் என் செய்வேமென்று அச்சமுற்று அரையன் குதிரைச்சாலையில் ஒரு கலிங்க வுருக்கொ டிருந்தனன். அங்ஙன மிருப்புழிப் பரிமாக் கொடுபோம் பொருட் டவணுற்ற கள்வனொருவன் இஃதேனையவற்றினும் மிக நன்று யிருந்தமை கண்டு அதன் வாயிற் கலி

னம் பெய்து புறத் தீர்த்துவந்து அதன்மீ தூர்ந்து வீட்டின்பால் நடாத்தாநிற்கையில், அஃது இங்குமங்கு மோடத் தலைப்பட, சம்மட்டியால் அறைந்து பார்த்துஞ் செவ்வனே செல்லாமையால், அக் கள்வன், இதுகாறும் யாங்கண்ட பற்பல மாக்களில் இஃதொத்ததைக் கண்டோமில்லை, ஆதலால் இஃதேதோ கிருத்திரிமமா யிருக்கின்றதென் றுள்ளங் கலங்குறுகையில், அக் குதிரை கொன்மரத்தின்கீழ் ஈர்த்தோட, அப்போது மேலிருந்த கள்வன் விரைந்து ஆலின் வீழைப்பற்றித் தொத்தி அத் தருமீ தேற, இராக்கதன் விளாசனுக் கஞ்சி யோடினன். அதைக் கண்ட அம் மரமீ திருந்த வானரம், "அடா! இவன் மனிதன், நீ அரக்கனு யிருந்தும் ஏன் இரிகின்றனை?" என, அதைக் கேட்ட சோரன் வெருண்டு கீசகத்தின் வாலத்தைப் பற்றி வருத்த, அரக்கன் குரங்கு வஞ்சகமுளதென் றெண்ணி மீண்டும் விரைந்தோடினன். ஆதலால் அக் கவிக் கெய்திய இன்னல்போல் எனக்கும் உளதாமென்று இந் நேமியைக் குறித்து அஞ்சுகின்றனன்' என, சக்கிரி 'தெய்வம் எதிர்ப்பின் யாவரும் இங்ஙனம் இடுக்கண் அனுபவிப்பர் கேண்மோ, இலங்கேசன் திரிகூடாசல மொத்த மலையும், கடலொத்த அகழியும், தான் அரக்கனும், பேராற்றலுடையானும், சுக்கிரன் குருவுமாக, இவ்வண்ணம் ஒன்றுக்கொன்று குறைபாடின்றி யிருந்தும், அவனை ஒரு குரங்கு அவமானத்தாற் றலைதாழ்ப்பித்தது. ஆதலால், விதிவலிமுன் யாவன் சூழ்ச்சிவலியாயினும் யாது பயன்படும்? அவ்வூழ் ஒன்றியிருப்பின் தீயவும் நல்லவாய்விடும். இவ் வண்ணமே சிதடன் கூனன் முக்கட்பெண் இவர்கட்கு முன்னம் நேரிட்ட

தொன்று கேட்டிலேயோ?' என, பொன்வாய்ப்பினன் அஃதெங்ஙனமோ? இயம்புதி' என, சக்கிரதரன் சொல்வான் :

## கதை - 10

மதுபுரக் காவலனாகிய மதுசூதன னென்பவற்கு மூக்கட்பெண் தோற்றினமையாற் சோதிடம் வல்லோனைக் கூய், "இதற்குச் செயற்பாலதென்?" எனக் கேட்புழி, சோதிடம் வல்லோன் "சார்வபௌம! கேட்குதி, எவனாயினும் சொல்வதை முன்னர் நன்காராய்ந்து சொல்லவேண்டும்; அங்ஙனம் ஆராயாது சொல்லின் சண்டகருமன் கதிபோலாகும்" என, அரையன் "அவன் யாது உரைத்தனன்?" என, சோதிடம் வல்லோன் சொல்லலுற்றனன் :

## கதை - 11

"தண்டகாரணியத்திற் சஞ்சரிப்போனாகிய சண்டகரும னென்னும் ஓர் இராக்கதத் தலைவன் அவண் நேரிட்ட ஓர் அந்தணன் தோள்மேலேறி நடத்திக்கொண்டு போவுழி, அவ் வேதியன் அவ் வரக்கன் அடிகள் மிக மெல்லியவா யிருப்பனவற்றைப் பார்த்து, 'ஐய, அரக்கத் தலைவ, உன் காலடிகள் எப்படி மெல்லியவாயின?' என, அரக்கன் 'நான் நீராடி ஈரம் புலராளவும் நிலன் மீது செல்லேன்' எனக் கேட்டுச் சிறிதாறு முன்னே தாங்கிப்போய்ப் பிறகு இராக்கதன் ஓர் குளனில் மூழ்கப் புக்குழிப் பார்ப்பானைப் பார்த்து, 'யான் நித்தகருமஞ் செய்து வருகாறும் நீ அடிபெயரற்க, இங்குத் தானே நிற்றி' எனச் சொல்லி, பின்னர் நானஞ் செய்த

னன். அந்தணன் இதைப் பார்த்து, இவன் மூழ்கிப் புறம்போந்தானுனல் நாம் இவன் வயிற்றழலில் மூழ்கா திரோம், ஆதலால் ஓடி உய்ய இதுவே நல்ல அமயம், நீராடிக் கால்புலருமுன் இவன் நடவானல்லவோ வென்று தனக்குட் டெரிந்துகொண்டு விரைந்தோடினன். அது கண்ட அரக்கன், யான் வாய்பதறிக் கைக்கெட்டினது வாய்க்கெட்டாமல் இழப்புற்றேன், கடிதிற் பிற்சென்று கவர்வே மெனினுங் கொண்ட நோன்பு குறைபுறுகின்ற தென்று மறுக்கமுற்று, ஆங்கே நெட்டுயிர்த்து வாளா நின்றனன். ஆதலால் யாதும் உய்த்துணராது இயற்ற லாகாது” எனச் சொல்லிப் பின்னர்ப் பன்னூல்களையும் நன்காய்ந்து கடைப்பிடித்து, “இம் முக்கண் அரிவை யைப் பார்க்கவொண்ணாது; என்னையோ வெனின், விரூப மக வுளதாயின் அதைக் காணலாகாதென்பது நூற்றுணிபாம்; மற்றும் இஃது ஆன்றோர் ஒழுக்கமு மாம்” என, ஏந்தல் அம் மொழி யுட்கொண்டு அக் கன்னியை வேற்றுழிவைத் தளித்தபின்னர், அவள் பூத்தமையால் இவள் மணத்திற்கு இயைபவனுக்குப் பெரும் பொருட்குவை தருவலெனத் தேயந்தோறும் மணவோலை போக்கினமையைக் கேட்ட இரந்துண்ணும் மண்டையராகிய ஓர் குருடனும் கூனனும் விவாக விருப் பால் மன்னன்பாற் புக்கனர். அவருட் குருடன் அர யனை நோக்கி, “நுங் கன்னிகையை யெமக்குத் தரற் கோடும்” என, இறைவன் இச் சுயம்வரற்கு நங் கன் னிகையைக் கடிபுரிவது தக்கதென்று உள்ளி, அவனுக்கு மகட்கொடை நேர்ந்து, அங்ஙனமே கடிமுடித்து அள வில் பொருள் தந்து, “நீ கணமும் நீட்டியாமற் பரதேயம் போதி” என்றனன். அவ் விடைகொண்டு மூவரும்

பரதேயம் புக்கிருப்புழி, அவள் அக் கூனற்கு வயமாய் அவனை நோக்கி, “இக் குருட்டுச் சவத்தை நஞ்சிட்டுக் கொல்லின் நாம் இடையூறின்றி வாழ்வோம்” எனக் கேட்டு, அவன் செத்த பாம்பொன்றைத் தந்தனன். அவ் வணங்கு அதை யேற்றுக் கண்டித்து அடுப்பின்மேல் வேவ வைத்துப் பொறியிலியை, “இத் தசை நிற்குறித்துக் கொணர்ந்தேன்; இச் சல்லி யெரித்துக்கொண்டிரு; நான் வேறு கருமத்திற் புகுகின்றேன்” என, அக் கண்ணறை அவ்வாறே இளந்தழலா லெரித்துக்கொண் டிருப்புழி அக் கிருட்டின சருப்ப ஆவி கண்ணிற் றாக்கி அவ் விடத்தினாற் கண்ணுரோகந் தீர்ந்து முன்போற் கண் தெரிந்தமையால், இவர் இருவரும் இவன் குருட்டுதவியால் நகைத்து விளையாட்டயர்வதைக் கண்டு, காலால் நெறிகாணும் பண்டைமாட்சிபோல் வந்து கூனனைப்பற்றி ஈர்த்துச் சீற்றத்தாற் றாக்கி அவள் முகத்தில் எற்றினவளவில் அவள் மூன்றும் விழி மறைந்து இக் கூனன் கூனும் நிமிர்ந்தது. ஆதலால், தெய்வ ஒற்றுமை யிருந்தால் யாவும் நல்லவாம்’ என, சக்கிரதரன் ‘நல்லது, நீ உன் கிருகத்துக்கு ஏகுழி வழித்துணையோ டேகு. ஊர் வழி தனித்துச் சேறலும் எல்லோரும் உறங்குகையில் விழித்திருக்கையும், தலையாய பொருளு மின்பமுந் தனக்கே யுளவாகுக வென்னும் விருப்பமும் ஒழியற்பாலனவென நூல்க ளறைகின்றன. இங்ஙனம் நூல்நெறி கடவா ஒழுக்கினன், புயங்கத்தினின்றும் ஓர் வேதியன் உய்ந்தவண்ணம் உய்வன்’ என, சுவர்ணசித்தி ‘அப் பனவன் உயல் எவ்வாறு நிகழ்ந்தது’ என, சக்கிரி சொல்வானாயினன்

## கதை - 12

நாசிக தேயத்தனாகிய தத்தனென்பவன் அன்னையை நோக்கி, "யான் ஆரியன் கருமத்தால் ஓர் ஊர்க்குப் போகுவல், விடைதருதி" என, அவ்வின்றாள் "குழந்தாய்! ஒருவனா யேகற்க" எனக் கேட்டு அவன் "தாயே! நெறி ஊறின்றி யிருக்கின்றதே" என, அவள் மீண்டும், "அப்பனே! எஃதுளதாயினும் நீ நெறித்துணை யின்றிச் சேறலாகாது" என்று கூபத்தில் ஓர் நண்டைப்பற்றி ஓர் கலயத்திற் பெய்து கொடுத்து, "இதையேனுந் துணைக்கொடு போ" என, அவ்வாறே அவன் ஆய்மொழி மேற்கொண் டேகுழி, நெறியில் வேனிலால் வேசற்று ஓர் தரு நிழலிற் கண்வளராநிற்குமிடத்து, யாண்டிருந்தோ அவற் றீண்டவந்த ஓர் அரா இம் மட்கலயத்திற் பெய்திருப்பது என்னென்று அதனுட் டலைநீட்டுகையில், அஞ் ஞெண்டு இஃதோர் காரராவென் றுணர்வுற்றுக் கொடுக்கா லிடுக்கிக் கொன்றது. பின்னர் அந்தணன் விழித்து இப் பணியைப் பார்த்து இஃதெங்ஙனம் இறந்ததெனச் சூழ்வுழி, அதன் சென்னியை அலவன் கத்தரிக்கக் கண்டு இத்துணைச் செயலுமிதுவே புரிந்தது, மாதா தந்த வழித்துணையாற் பிழைத்தேன், தாயிற் சிறந்தொரு கோயிலுமில்லை என்றது பொய்யாதென்று அந் நண்டைக் கைக்கொடு இல்லம் புக்கு அன்னைக்கு அட்டாங்கம் நிலந்தோய வீழ்ந்து பணிவு தோன்றத் தழுதழுத்து வாழ்த்தி நிகழ்ந்த செய்திகளை விளம்பி இன்புற் றிருந்தனன்' என, பொன்வாய்ப்பினன் 'இது தக்கதேயாம். ஏனெனில், மந்திரம், தீர்த்தம், பெரியோர், சோதிடன், மருத்துவன், குரு இன்

ஞோர்பால் எவன் எவ்வணம் பாவனை புரிவானோ அவன் அவ்வணம் பேறு பெறுவான்' என் றிங்ஙனம் நேமியானைத் தேற்றித் தன் மனைக் கேகினன்."

இங்ஙனம்

சோமசருமனென்போன் அரசன்மக்கட்கு உரைத்த

பஞ்சதந்திரம் முடிந்தது.

# பஞ்சதந்திரம்

## அரும்பதவுரை

### பக்கம்—1

பஞ்சதந்திரம்-ஐந்து உபாயம்.
வரலாறு - வந்தவழி.
உறைவிடம் - வசிக்குமிடம்.
பாடலிபுரம் - பாடலிபுத்திரம்; (literally) இளைய பாதிரி மரங்களை யுடையது.
சுகுணம் - நற்குணம்.
சுதரிசனன் - (lit.) நல்ல ஞானமுள்ளவன்.
வேதசாஸ்திரம்-வேதமும்சாஸ்திரமும்.
அயோக்கியன் - யோக்கியதை யில்லாதவன்.
ஜன்மாந்தர - வேறுபிறப்பிற் செய்த. இங்கு முற்பிறப்பு.

### 2

பருவம் - யௌவனம்.
ராஜசம் - ஸாத்விகம், ராஜஸம் தாமஸம் என்னும் முக்குணங்களுள் ஒன்று.
பாடு - கஷ்டம்.
மறுசனனம் - வேறு பிறப்பு. இருபிறப்பாளர் என்பதன் பொருளைக் கவனிக்க.
சோமசன்மா: சோமன்-பெயர், சர்மன் - சாதியை யுணர்த்துவது, சோமசன்மா பிராமணன். க்ஷத்திரியசாதியை வர்மன் என்பதும், வைசிய சாதியை குப்த என்பதும், சூத்திரசாதியை தாஸ என்பதும் உணர்த்தும்.
சபதம் - பிரதிஞ்ஞை.
கருப்பஞ்சாறு-கரும்பின் ரஸம்.

### 3

தேற - தெளிய.
மங்களம் - நன்மை.
ஆசீர்வதித்து - வாழ்த்தி.

### 4

ஒருமை - ஒற்றுமை.
மகிழாருப்பியம்-மஹிலாரோப்யம் (lit.) உத்தம ஸ்திரீகளுக்கு வாச யோக்கியமானது.
வர்த்தமானன் - (lit.) விருத்தி யடைகிறவன்.
உத்தம - சிறந்த.
பாத்திரம் - தானம் பெறுதற் குரியார்.

### 5

யோக்கியம் - தகுதி.
சஞ்சீவகன் - (lit.) நன்றாகப் பிழைப்பவன்.
நந்தகன் - (lit.) சந்தோஷிக்கச் செய்பவன்.

தேசாந்தரம் - வேறு தேசம்.
எதேச்சை - தன் இஷ்டம்.
பட்டாபிஷேகம் - பட்டம் நெற்றியிற் கட்டி மந்திர நீராட்டுதல்.
பிங்களன் - (lit.) மஞ்சள் வர்ணமுள்ளவன்.
யமுனை - the Jumna.

6

ரிஷபம் - இடபம், எருது.
முக்காரம்போடு - bellow.
காடகன் - (lit.) ஊளையிடுபவன்.
தமனகன் - (lit.) அடக்குபவன்.
கடாவிய - உள்ளே அழுந்த நாட்டிய.
மகததேசம்-the South Behar.
சுதத்தன் - (lit.) நல்ல தானங்களை யுடையவன்.
பணி - வேலை.
முளை - ஆப்பு.
நந்தவனம் - பூந்தோட்டம்.

7

பிராணச்சேதம் - உயிர் நாசம்.
சுவாமி - யஜமானன், அரசன்.
சேவை - service.
பலி - (அதற்கென்றிடும்) உணவு.
கவளம் - mouthful.

8

சேரங்கை-குவிந்த உள்ளங்கை.
இதாகிதம் - இதம் அகிதம், நன்மை தீமை.
யோசனை - ஆலோசனை.

மனோராச்சியம்பண்ணல் building castles in the air.
கொம்பு - மரக்கிளை.
பிரதானி - மந்திரி.
லகுவானவன் - அற்பன்.

9

பண்டிதன் - வித்வான்.
சதுரன் - சமர்த்தன்.
பரதேசம் - அந்நியதேசம்.

10

இங்கிதம் - இனிமை.
உத்தரம் - விடை, பதில்.
பிருகஸ்பதி - வியாழன் (Jupiter).
அனுசரித்தல் - சார்ந்திருத்தல்.
செலவு - விடை.

11

தண்டம் - நமஸ்காரம்.
வராகம் - பன்றி.
சுள்ளாணி - கடையாணி (a linchpin).
கருவி - சாதனம்.

12

ஆற்றல் - சக்தி.
வழுக்கி - சறுக்கி.

13

அசதியில் - திடீரென்று.
பேரிகை - முரசு.
புஷ்டியாய் - கொழுத்து.

14

அகத்தியம் - அவசியம்.

மத்தகம் - தலை, நெற்றி.
அங்குசம் - தோட்டி.
ஆஷாடபூதி - பேராசை யுடையவன் ; (lit.) அதிகமான அநுபவமுள்ளவன். ஆடி மாசத்துப் பிறந்தவன் என்பதும் ஒன்று.
கூட்டுறவு - சேர்க்கை.

15

தேவசன்மா - தேவனென்னும் பிராமணன்.
நிசாரம் - நிஸ்ஸாரம்; சாரமில்லாமை.
சமுசார சாகரம் - பிறப்பிறப்பாகிய கடல்.
கடைத்தேற - ஈடேற.
மகாநுபாவன் - பெரிய பிரபாவ முள்ளவன்.

16

கன்னமிடல் - கன்னக்கோல் வைத்தல்.
அன்னதாதா - அன்னம் கொடுப்பவன்.
குருக்கள் - ஆசாரியர்.
ஏழை - innocent.
பரசொத்து-அந்நியர் சொத்து.
பரமாத்மா - the Supreme Soul. இங்கு உத்தமன்.
அனர்த்தம் - துன்பம்.

17

ஏய்த்தல் - ஏமாற்றுதல்.
உப்புக்கண்டம் - salted meat.
பார்ப்பாத்தி - பார்ப்பினி.
விக்கினம் - இடையூறு.
மணி - இரத்தினம்.

சொர்ணமாலை - பொன்மாலை.
கிருஷ்ண சர்ப்பம் - கரு நாகம்.

18

நிர்மூலமாய் - வேரற்று.

19

தள்ளாமை - அசக்தம்.
பேதைமை - foolishness.
பரிவாரம் - followers.

20

மஞ்சனச்சாலை-குளிக்குமிடம்.
மதோன்மத்தன் - (lit.) மதத்தால் மெய்ம்மறந்தவன்.
வரையறை - அளவு.

21

மிருகேந்திரன் - மிருகங்களுக்கு அரசன்.
முறை - turn.

22

விண்ணப்பம் - மனு.
விசுவாசம் - சிநேகம்.

23

ராஜ லக்ஷ்மி - ராஜத்துவத்துக்கு அதிதேவதை.
லோகம் - உலகம்.
ரோகி - வியாதிஸ்தன்.
விபத்து - கேடு, துன்பம்.
துர்லபம் - அருமை.
காதகன் - கொலைகாரன்.
அபயம் - பயமின்மை ; அடைக்கலம் (refuge).

24

குணக்கு - வளைவு.
விருத்தாந்தம் - செய்தி.
பாமரர் - மூடர் (the illiterate).

மந்திராலோசனை - ஆலோசனை.
செய்யமாட்டுவான் - செய்ய வல்லான்.

25

பஞ்சனை - மெத்தை.
மந்தவிசர்ப்பிணி - (lit.) மெல்ல நகரும் சுபாவமுள்ளது.
டிண்டிபன் - டிண்டிமன்; (lit.) டிண்டிம வாத்தியம் போன்ற ரூபத்தையுடையவன்.
துடுக்காய் - பதட்டமாய்.
சயனம் - படுக்கை.
கடுகடுத்து - கோபித்து, வெடுவெடுத்து.
சகவாசம் - சிநேகம்.

26

நிசம் - உண்மை.
சந்நிதி - presence.
சம்மானம் - மரியாதை.
காலமேது - காலம் எப்படிப் பட்டது.

27

துர்ச்சனர் - துஷ்டர்.

28

மதோற்கடன் - (lit.) அதிக மதமுள்ளவன்.
இட்டுக்கொண்டு - அழைத்துக் கொண்டு.
மந்தானகன் ஸம்ஸ்கிருத நூலில் கதனகனென்றுள்ளது; அதற்குப் பேசுபவன்

29

அதீனத்தில் - வசத்தில்.

30

அசுவமேதம் - horse-sacrifice.
ரக்ஷணை - காப்பு.
துறக்கல் - விடல்.
பாலனம் - பரிபாலனம்.

31

சித்தமானால் - இஷ்டமானால்.
கீழ்கள் - base ones.
மூனை - முகம்.

32

தாரதம்மியம் - ஏற்றத்தாழ்வு, வித்தியாசம்.
விகடன் - விசாலமானவன்.
சங்கடன் - நெருக்கமானவன்.
கம்புக்கிரீவன் - சங்குபோன்ற கழுத்தையுடையவன்.
செப்பட்டை - சிறகு.
ஸ்திரம் - உறுதி.

33

கொம்பு - கழி.
புலால் - மாமிசம்.
சேவல் - ஆண் (சிட்டு).

34

வலைகாரர் - செம்படவர்.
மூர்க்கத்தனம் - மூடத்தனம்.

35

திராணி - சக்தி.

36

சாமம் - சமாதானம், தானம் கொடை, பேதம் - வேறு பாடு, தண்டம் - சிக்ஷை: இவை சத்துருக்களை வெல்லும் உபாயங்கள். இவற்றைத் தமிழ் நூலார் முறையே இன்சொற் சொல்லல், கொடுத்தல், வேறுபடுத்தல், ஒறுத்தல் என்ப.

37

குணவந்தர் - குணவான்கள்.
கபடி - கபடமுள்ளவன்.
மின்மினி - the fire-fly.

38

சுமுகன்-(lit) நல்லமுகத்தை யுடையவன்.
சுபுத்தி - (lit.) நல்ல புத்தி யுள்ளவன்.

39

பஞ்சாயத்து-ஐவர்கூடிய நியாயசபை.
கெடு - தவணை.

40

குளிரன் நண்டுக்கே பெயர்.

41

கிருத்திரிமம் - கபடச்செய்கை, சூது.

42

தேவதத்தன் - (lit.) தேவனுற் கொடுக்கப்பட்டவன்.
சாவகாரி - a banker, a merchant (Sowcar).
அபூர்வம் - முன் இல்லாதது.

43

அசம்பவம் - சம்பவிக்க மாட்டாதது.
ஆண்டவன் - lord.

44

பிரவர்த்தித்தல் - முயலுதல்.
உதாரத்துவம் - generosity.
லோபத்துவம் - avarice, niggardliness.

45

சுகிர்ல்லாபம் மித்திரலாபமெனவும் பெயர்பெறும். தமிழில் நட்புப்பேறு என வரும்.
சாதனம் - கருவி.
கோதாவரி - (lit.) சுவர்க்கத்தைக் கொடுப்பது.
லகுபதனன் - (lit.) சுலபமாய்ப் பறக்கிறவன்.
துராத்மா - துஷ்டன்.
யத்தனம் - முயற்சி.
தெளித்து - இறைத்து.
சித்திரக்கிரீவன் - (lit.) பலவர்ணமான கழுத்துள்ளவன்.
நிர்மானுஷ்யமான - மனிதசஞ்சாரமில்லாத.

46

பிராமணோத்தமன் : பிராமண + உத்தமன்.

47

வைகறை - விடியற்காலம்.
வேட்டல் - யாகஞ் செய்தல்.
அபூர்வ - ஒப்பில்லாத, அதிசயமான.

லோகாபவாதம் லோகநிந் தனை.
சாதுக்கள் - நல்லோர்கள்.

**48**

உளை - சேறு.
புதைந்து - அழுந்தி.
வேதாத்தியயனம்: வேதம் + அத்தியயனம் (ஓதுதல்).
பச்சாத்தாபம் - பின் வருந்தல் (to repent).
குரோதம் - கோபம்.

**49**

நீசன் - இழிந்தோன்.
பிராப்தியாயிற்று-கிடைத்தது.
கபோதம் - புறா.
கண்டகி : a tributary of the Ganges.
தீரம் - கரை.
சித்திரவனம் - (lit.) பலவித மான மரங்களை யுடைய வனம்.
இரணியகன் - (lit.) பொ ன்னை யுடையவன்.

**50**

தீங்குரல் - இனிய குரல்.
அவஸ்தை - கஷ்டம்.

**51**

தெய்வம் - ஊழ், விதி.
பாசம் - கயிறு.
பந்தனை - பாசம்.
தளை - பாசம்.
கட்டு - பாசம்.

**52**

முகாந்தரம் - ஹேது, இடம்.
அசாத்தியன் - அடைதற்கு அரியன்.
குத்திரபுத்தி-(lit.) அற்பபுத்தி யுள்ளது.

**53**

சம்புகன் - நரி.
சரற்கவன் - (lit.) கண்கள் போனவன் (குருடன்).
வழக்கமில்லாதவன் - பழகாத வன்.
பாகீரதி - (lit.) பகீரதன் கொண்டுவந்த கங்கை.
திரிகூடம் - மூன்று சிகரங்களை யுடையது.
இத்தி - ஒருவகை மரம், கல் லால்.
நெருக்கி - மிகுத்து.

**54**

வந்தனம் - நமஸ்காரம்.
விருத்தாந்தம் - வரலாறு.
சாந்திராயணம் - சந்திரன் வளர்வதையும் தேய்வதை யும் பற்றி வகுத்துள்ள ஒரு விரதம்.
ஆசரித்து - அநுஷ்டித்து.

**55**

அதிதி - விருந்தாக வருபவன்; (lit.) திதி நியமமில்லாத வன்.
சண்டாளன் - புலையன்.
வைராக்கியம் - ஆசையின்மை.

56

ருத்திராக்ஷப் பூனை - humbug.
சோதிக்க - தேட.

57

இளவிள : மிக்க இளமையைக் குறிப்பது.
தினமானம் - தினந்தோறும்.
மனோரதம் - இஷ்டம்.

58

கூட்டாளி - உடனிருப்பவன்.
கொல்லை - தோட்டம்.

59

சங்கேதம் - ஏற்பாடு.

60

சற்சனர் - நல்லோர்.
அத்தியந்த - அதிக.
தண்டகாரணியம் - தண்டகா என்னும் காடு. அது தக்கிணத்தில் நருமதைக்கும் கோதாவரிக்கு மிடையிலிருந்தது.
கர்ப்பூரகௌரம் - (lit.) கர்ப்பூரம்போல வெண்மையானது.
மந்தரன் - (lit.) மெல்லப் போகிறவன்.

61

ஆதித்தியம் - (from அதிதி) உபசாரம்.
கூர்மம் - ஆமை.
சம்பகாவதி - (lit.) சண்பகங்களை யுடையது.
சூடாகர்ணன் - (lit.) காதில் மயிருள்ளவன்.
கப்பரை - யாசகர் பாத்திரம் (bowl).
வீணாகர்ணன் - (lit.) வீணை போன்ற காதுள்ளவன்.

62

வியாபாரம் - தொழில்.
தனமதம் - செல்வச் செருக்கு.
இழவு - இழப்பு, நஷ்டம்.
கிருகச் சித்திரம் - வீட்டில் உள்ள ஊழல்.

63

சூரன் - வீரன், சௌரியவான்.
சாயை - நிழல்.

64

சம்பன்னன் - அமைந்தவன்.
சித்திராங்கன் - (lit.) புள்ளியோடுகூடின அங்கமுடையவன்.

65

கர்ச்சனை - முழக்கம்.

69

சந்திவிக்கிரகம் தமிழில் அடுத்துக் கெடுத்த லெனப்படும். காகம் உலூக மென்றிவற்றின் கதையைச் சொல்லுதலால் வடமொழியில் காகோலூகீயம் எனவும் பெயர் பெறும்.
கோட்டான் - கூகை.
மேகவர்ணன் - (lit.) மேகம் போன்ற நிறமுடையவன்.

அரிமர்த்தனன் - (lit.) சத்துருக்களைக் கொல்பவன்.

70

இச்சகம் பேசுதல் - கருத்துக்கிணங்கப் பேசுதல்.
உத்தமசீவி - (lit.) மேன்மையாகப் பிழைப்பவன்.
நெருக்கமான - கஷ்டமான.
மாற்றார் - பகைவர்.
கூர்ம விருத்தி - ஆமையின் தொழில்.

71

கெலிப்பு - வெற்றி.
தோற்பு - தோல்வி.
அசமயம்-தகுதியில்லாக்காலம்.
சந்தி - சிநேகம்.
விஷமச்சுரம் - முறைச்சுரம்.
அப்பியங்கனம் - அப்பியஞ்சனம்; எண்ணெய் தேய்த்தல்.
சிந்தையில்லை - கவலைவேண்டாம்.
வைரி - சத்துரு.

72

பொருந்தல் - சந்தி.
பொருதல் - போர்புரிதல்.
முதலறக்கெடு அடியோடு கெடு.

73

துர்க்கம் - மலைக்கோட்டை.
சிக்கென - உறுதியாக.
அந்தரமாக - ஆதாரமின்றி, வெளியில்.

74

பலாபலம் : பலம் + அபலம்.
விகிதம் - தகுதி.
முகநட்புள்ளவர் - அகநட்பில்லார்.
புரைசல் - இரகசியம்.

75

வேவுகாரர் - ஒற்றர் (spies).
மீகாமன் - மாலுமி.

76

நாவிதன் - அம்பட்டன்.
பணிப்பெண் - ஏவல் செய்பவள்.
சிரக்கம்பனம்-தலையசைத்தல்.
குரூபி - அவலக்ஷண முடையவன்.
தோலோதோல்: அசம்மதத்தைக் குறிக்கும் ஒரு சொல்.
கருடன் பெயரிஞலேயே : கருட நாமோச்சாரணத்தால் சகல வரங்களும் பெறலாகும் என்பது சாத்திரத் துணிவு. 'நம்மிடத்தில் மனிதர்கள்' என்பதை 'மனிதர்கள் நம்மிடத்தில்' என மாற்றி வழங்குவது முண்டு.

77

சந்திரவிம்பம் - சந்திர னுருவம் (பிம்பம்).
சதுரதந்தன் - நான்கு தந்தங்களை யுடையவன்.
தாகித்து - தாகமெடுத்து.
மடு - தடாகம்.
சல்க்கிரீடை - நீர் விளையாட்டு.

### 78

விசயதந்தன் - (lit.) ஜயிக்கிற வார்த்தையுள்ளவன்.
நிமித்தம் - சாக்கு.
நிபுணன் - சமர்த்தன்.
மௌட்டியம் - மூடன் குணம்.

### 79

பூதபதி - யானைகட்குத் தலைவன்.
பிரதியுத்தரம் - மறுமொழி.

### 80

கடுகென - விரைவாக.
சமாதி - trance.
அவற்கு: அவன் + கு.
நுற்றி - தறி.
கூர்ம்பல்லன் - (lit.) கூர்மையாகிய பல்லையுடையவன்.
முதுமரம் - பழையமரம்.
கபிஞ்சலன் - (lit.) குரங்கு போலச் சிறிதுமஞ்சள் நிறமுள்ளது அல்லது மனோஹரமாய்ச் சப்திப்ப.

### 81

சசம் - முயல்.
பொட்டென - விரைவாக.
வாவி - இறங்குகிணறு, துரவு.
சொத்துவம் - உடைமை.
விவாதம் - வழக்கு.

### 82

அபிநயித்து - நடித்து.
அசாரமான - சாரமற்ற.
கணம் - க்ஷணம்.
கனா - கனவு, சொப்பனம்.
பாவை - பதுமை.

### 83

யாகம் - sacrifice.
சுத்தமாய்த் தின்னேன் - தின்னவே தின்னேன்.
நடுவுநிலைமை பக்ஷபாதமில்லாமை.

### 84

பசப்பு - மயக்கு.
மங்கள ஸ்நானம் - சுபகாரியம் தொடங்குமுன் முழுகல்.
ராஜ்யாபிஷேகம் - முடிசூட்டு.
பேடு - பெட்டை.

### 85

நுணல் - தவளை.
உசாவி - கேட்டு, விசாரித்து.
தலைமுறை - generation.
மித்திரசர்மா - மித்திரனென்னும் பெயருடைய பிராமணன். மித்திரன் சூரியன் பெயர்.
பசு - யாகத்துக்குரிய பிராணி.

### 86

தூர்த்தன் - வஞ்சகன்.
பஞ்சகவ்வியம் - பசுவின் ஐந்து (கோசலம், கோமயம், பால், தயிர், நெய்).
நிஷித்தம் - தள்ளத்தக்கது.
கபடி - வஞ்சகன்.
சசேல - கட்டிய துணியோடு.

### 87

உளவு - இரகசியம்.
உள்ளுறை - கருத்து.
இடர் - துன்பம்.

தான மானம் - கொடை மரி யாதை.

89

ஈட்டி - சம்பாதித்து.
வைது - திட்டி.
குருதிக்கண்ணன்-(lit.) இரத்தம்போற் சிவந்த கண்ணை யுடையவன்.
கொடுங்கண்ணன் - (lit.) கொடுமையாகிய கண்ணை யுடையவன்.
கொள்ளிக்கண்ணன் - (lit.) கொள்ளிபோன்ற கண்ணை யுடையவன்.
குரூரநாசன் - (lit.) துஷ்டர்களை நசிக்கச்செய்பவன்.
பிரகாரநாசன் - (lit.) சத்துருக்களை நாசஞ்செய்பவன்.

90

சுவபக்ஷம் - தன் பக்கம்.
பரபக்ஷம் - எதிர்ப்பக்கம்.
பேதிக்க - கெடுக்க.

91

கடாரி : கன்றுகள் பெண் என்பதை யுணர்த்தும்.
தும்பு - கயிறு.
கோரப்பல்-பயங்கரமான பல்.
செம்பட்ட - சிவந்த.
சத்தியவசனன்-(lit.) உண்மை பேசுபவன்.
சோரன் - திருடன்.
கோக்கள் - பசுக்கள்.
அரவம் - ஒலி.

92

மெலுக்குவை - ஜாக்கிரதை. மெலகுவ என்பது தெலுங்குச் சொல்.
விருத்தமாய் - மாறுபட்டு.

93

மர்மம் - இரகசியம்.
வர்மன் : அரசர்க்குரிய பட்டம்.
பலி - (lit.) பலமுள்ளவன்.
வியாதிஸ்தன் - நோயாளி.

94

வாக்குவாதம் - தர்க்கம்.
லயம் - அழிவு, முடிவு.
சத்காரம் - உபசாரம், ஆதித்தியம்.
பரஸ்பரம் - ஒருவர்க்கொருவர்.

95

சௌரியம் - சூரன் குணம்.
ரௌரவம் - (lit.) எப்போதும் அழவைக்கிற நரகம்.

96

கண்ணி - வலை.
வனசரன் - வேடன் (வனத்தில் திரிபவன்).
தளை - விலங்கு.

97

ஓம்பாவிட்டால் - உபசரியாவிட்டால்.
வில்லி - வேடன்.
சந்துஷ்டி - சந்தோஷம்.
ஊன் - மாம்ஸம்.
கோர - கொடிய.

**98**

விசுவாச காதகன் நன்றி கொல்பவன்.
பிரமகத்தி-ப்ரஹ்மஹத்தி, பிராமணக் கொலை.
பிராயச்சித்தம் - பாப நிவிர்த்தியின்பொருட்டுச் செய்யும் கருமம்.

**99**

காரியகாரர் - காரியஸ்தர்.
மனோபீஷ்டம் - மனவிருப்பம்.
வாயசம் - காகம்.
கடைவாசல் - தலைவாசல்.

**100**

விசர்ச்சனம் - விடுதல், கழித்தல்.
குணநிதி - குணக்களஞ்சியம்.

**101**

சிகரம் - முகடு.
சரநகரன் - (lit.) கூரான நகங்களை யுடையவன்.
அவிபுச்சன் : ஸம்ஸ்கிருத நூலில் அதிபுச்சன் என்றுள்ளது. அதற்குப் பொருள் நீண்டவாலுடையது என்பது. அவிபுச்சனெனவே கொண்டால் வாலில்லாதவனல்லாதவன் எனப் பொருள்கொள்க.
சுவடு - print.

**102**

பிரதித்தொனி - echo.
போர் - பெருங்குவியல்.

**103**

விழுக்காடு - வீதம்.
சாகை - இருப்பிடம்.

**104**

மந்தவிஷன் - (lit.) குறைந்த விஷமுள்ளவன்.
அபாக்கியன் - தௌர்ப்பாக்கியன்.
பிரதோஷகாலம் - சாயங்காலம்.

**105**

மண்டூகம் - தவளை.
கதி - நடை.
புசங்கம் - பாம்பு.

**106**

பக்ஷணம் - இரை.
விருத்தம் - தவறு.
ருணம் - கடன்.
சேஷம் - மீதி.

**107**

பிரதாபம் - மகிமை, வீரம்.
சத்து - சன்மார்க்கன்.

**108**

லப்தஹானி தமிழில் பேறழிவு என வரும். லப்தவானி எனவும் எழுதப்படும். வரலாற்றில் அர்த்தநாச மெனப்பட்டது இதுவே.
குன்றுதவன் - குறையாதவன்.
வானரம் - குரங்கு.
நாநா - பல.
அந்நியோந்நியம் - பரஸ்பரம். இங்கே சிநேகம் என்னும் பொருளில் வந்தது.

### 109

சாக்காடு - சாவு.
முசலி - முதலை (இங்கு ஆண்).
காதலி - பிரியை.
அடம் - பிடிவாதம்.
மோவாய்க்கட்டை - தாடை.
குறுக்கு - தடை.
கரா - ஆண்முதலை.

### 110

இருதலைக்கொள்ளி - இரண்டு முனையிலும் எரியும் கொள் ளிக்கட்டை.
மகரம் - முதலை.

### 111

நறுங்கனி - தீங்கனி.
அமிழ்தம் - அமிர்தம்.

### 112

சுறுக்கு - விரைவு.
அண்ணி - அண்ணன் மனைவி
லேசமும் - கொஞ்சமும்.
பிரியதரிசனன் - (lit.) பிரிய மான பார்வை யுடையவன், அழகன்.
கங்காதத்தன் - (lit.) கங்கை யாற் கொடுக்கப்பட்டவன்.

### 113

பங்காளிகள் - தாயாதிகள்.
மாந்திரிகன் - மந்திரம் வல் லோன்.
நெருப்புத் துரும்புகளின் சேர் க்கை - நெருப்பும் துரும்பும் சேர்தல்.
பரம சத்துரு - கடும்பகை வன். விபரீதபாஷணம் - மாறு டான பேச்சு.

### 114

அநாயாசமாய் - கஷ்டமில்லா மல்.
ஆலசியம் - தாமசம்.
ஸ்ரீதேவி - ஸ்ரீதேவி, லக்ஷ்மி.
பிலம் - வளை. இங்கே புற்று.
சமுதாயம் - கூட்டம்.
இடும்பை - துன்பம்.

### 115

சூழ்ச்சி - உபாயம்.
கூபம் - கிணறு.
ஆணை - oath.
கவுளி - பல்லி.

### 116

கராளகேசரி - (lit.) பயங்கர மான பிடரிமயிரை யுடை யது.
தூசரன் (lit.) சிறிது வெண்மை நிறம் அஃதாவது சாம்பல் நிறமுடையவன்.
கண்டகன் - முள்போன்று இம் சிப்பவன்

### 117

கர்த்தபம் - கழுதை.
கண்டீரவம் - சிங்கம்.
வச்சிரம் - இந்திரனுயுதம். அது கூர்மையானது.

### 118

யுதிஷ்டிரன் - (lit.) சண்டை யில் நிலையாயிருப்பவன்.
ஓட்டாங்குச்சு - மண்பாண்டச் சல்லி.
கபாலம் - மண்டையோடு.
கருப்பு - பஞ்சம்.

முன்காயம் - விழுப்புண். அது போரிற் புறங்காட்டாமை யைக் குறிக்கும்.

## 119

ஏகாந்தமாய் - தனியாய்.
குலாலன் - குசவன்.
ரணரங்கம் - யுத்தகளம்.
அஸ்தலாகவம் - கைவன்மை.
விலங்கு - மிருகம்.
விஞ் - விவரம், புத்தி.

## 121

உத்தாரம் - கட்டளை.
நந்தனன்-(lit.) சந்தோஷிக்கச் செய்பவன்.
வரருசி - (lit.) சிரேஷ்டமான காந்தியுள்ளவன்.
ஏளனம் - இகழ்ச்சி.
பிணங்கி - ஊடி.
நிருபன் - அரசன்.
பதி - கணவன்.
வலசாரி யிடசாரியாக - வலம் இடம் சுற்றி.
சாஷ்டாங்கம் - எட்டு அங்கம் நிலத்திற்பட (கால்கள், கைகள், தோள்கள், மார்பு, நெற்றி).

## 122

முண்டனம் - மொட்டை யடித்தல்.
அநுசித - தகுதியில்லாத.
நருமதை - (lit.) சந்தோஷப் படுத்துவது.
பவானி-(lit.) பிறந்தபடி யிருப்பவன். 'யதா ஜாதன்' என்னும் பெயரையும் நோக்குக.

## 123

சலசரம் - நீரில் திரிவது.
நாராசம் - an iron rod.
சுடலை - சுடுகாடு.
கிலேசித்து - துக்கித்து.
துஷ்டை: ஆண்பால் துஷ்டன்.

## 124

மறித்தும் - மீண்டும்.
முட்டாட்டனம் - மூடத்தனம்.
ஆலங்கட்டி - hailstones.
நளிர் - குளிர்காய்ச்சல்.

## 125

இமமலை - இமயமலை.
சதுரன் - சமர்த்தன்.

## 126

பிராணதானம் - உயிர்ப்பிச்சை.

## 127

கிருகஸ்தன் - கிருகத்தில் நன்றாக வாழ்பவன்.
சகசமாய் - சுபாவமாய்.
உதிரம் - ரத்தம்.

## 128

அசம்பிரேக்ஷிய காரித்துவம் தமிழில் ஆராயாது செயல் எனப்படும். வடமொழியில் அபரீக்ஷிதகாரக மெனவும் பெயர் பெறும்.
அரையன் - அரசன்.
கண்ணுற்று - பார்த்து.
செவியுற்று - கேட்டு.
புரியல் - செய்தல்.

வெள்ளறிவன் - (lit.) அறிவில்லாதவன்.
மயிர்வினைஞன் - அம்பட்டன்.
மணிபத்திரன் - (lit.) இரத்தினங்களால் மங்களமுள்ளவன்.
கருமம் - செய்கை.
கண்டுழி - கண்டவிடத்து.
தேருமல் - ஆராயாமல்.
அவாசி - தெற்கு.
பைடணபுரி - Patna.
நல்குரவு - தரித்திரம்.
பரிபவம் - தாழ்வு.
ஆகுலித்து - துக்கித்து.
இடுகாடு - cemetery.
கவற்சி - கவலை.
மிடிமை - தரித்திரம்.

## 129

கண்வளர் - உறங்கு.
பதுமநிதி-ஒரு பதுமம் பெறும் நிதி. பதுமம் ஓர் எண், அது பத்து லக்ஷங்கோடியாம். அத்தனை பொன் பெறும் அந் நிதி. சங்கநிதி ஒரு சங்கம் பெறும் ; பதுமம் பத்துக்கொண்டது ஒரு சங்கமாகும்.
நீத்தோன் படிவம் - சந்நியாசியுருவம்.
கட்புலனுக - கண்ணுக்குத் தோன்ற.
சென்னி - தலை.
தண்டம் - தடி.
புடைப்பை - அடிப்பை.
பொற்குவை - பொற்றிரள்.
துயில் - உறக்கம்.
கண்டாங்கு - கண்டதுபோல.
அருத்தம் - பொருள்.
புலப்படுத்தற்க - வெளியிடாதே.
சுடர்விரி - ஒளிமிக்க.
பசும்பொன் - உயர்ந்தபொன்.
தேறி - தெளிந்து.
கரையேற்று நிற்கின்றனீர் - கரையேற்று நின்றீர், கரையேற்றுகின்றீர். கரை சமுசாரக் கடலின் கரையாகிய மோக்ஷம்.
குழு - கூட்டம்.
குடில் - குடிசை.

## 130

மாசுதீர்ப்போன்-அம்பட்டன்.
எட்டுணையும் - எள்ளளவும்.
சாத்தின - அடித்த.
குழாம் - கூட்டம்.
கலிபலி - ஆரவாரம். கலிபிலி என்பது தெலுங்குச்சொல்.
பிணித்து - கட்டி.
மஞ்சிகன் - அம்பட்டன்.
உறுக்கி - பயமுறுத்தி.
மங்கலன் - அம்பட்டன்.
விளித்து - அழைத்து.
பாராமரிசியாமல் - ஆராயாமல்.
ஊராளி - ஊராள்வோன்.

## 131

தேவநாம வேதியன் - தேவனென்னும் பெயருடைய பிராமணன்.
குழவி - பிள்ளை.
மதலை - சிசு.
உதகம் - நீர்.
கான்முளை - குழந்தை.
வகுத்து - சொல்லி.

தடாக்கரும வயத்தனாய் - தன்னைக் கூடாத தொழிலைப் பற்றி. தடாக கருமவயத்தனென்று பாடங்கொண்டு தடாகத்துக்குச் சென்று செய்யவேண்டிய கருமத்தைப் பற்றி என்று பொருள் சொல்வாரு முண்டு.
புறம் - வெளி.
நகுலம் - கீரி.
கண்டம் - துண்டு.
துவாரம் - வாசல்.
செந்நீர் - இரத்தம்.
வதனம் - முகம்.
உள்ளி - நினைத்து.
துணுக்குற்று - அச்சமுற்று.
துணிக்கைக் குவை - துண்டுகள் குவிந்திருத்தல்.
சோகம் - துக்கம்.
ஆண்டு - அவ்விடத்து.
வெறுமையென - தக்க நியாயமின்றி.

**132**

கலுழ்தல் - அழுதல்.
பேதாய் : பேதையின் விளி.
அணித்தாக - சமீபமாக.
பைரவாநந்தி - (lit.) பைரவனிடத்தில் ஆனந்திக்கிறவன்.
மிடி - தரித்திரம்.
வதிதல் - தங்குதல்.
கடைப்பிடித்து - உறுதிசெய்து.
அவனுழை - அவனிடம்.
நலிகின்ற - வருத்துகின்ற.
தொலைப்பான் - தொலைக்க.
விழைவு - விருப்பம்.
சாந்துணையும் - சாமளவும்.
பரபரப்பு - தீவிரம், ஆத்திரம்.
சித்தி - பேறு.

**133**

வர்த்தி - திரி.
பொன்விருப்போர் - பொன்னை விரும்பினோர்.
சிறிதாறு : சிறிது + ஆறு (வழி).
தொட்டு - தோண்டி.
தாமிரக்கனி - தாமிரச் சுரங்கம்.
ஏனையோர் - மற்றவர்.
கூப்பாடுசேய்மை - கூப்பாட்டுச் சேய்மை, கூப்பிடுதூரம்.
இராசி - வகை.
எஞ்சிய - மீந்த.
சொன்னம் - சுவர்ணம்.

**134**

வேட்கை - ஆசை.
அவண் - அவ்விடத்து.
மாற்றம் - சொல்.
நேமி - சக்கிரம்.
இதுகாறும் - இதுவரையும்.
கவன்று - கவலைப்பட்டு.
நெட்டுயிர்ப்பு - பெருமூச்சு.
எத்துணை - எத்தனை.

**135**

வல்சி - உணவு, சோறு.
நிதிக்கோன் - குபேரன்.
ஐயுற்று - சந்தேகித்து.
இறுப்பான் - விடைசொல்வான்.
மூதூர் - பழைய ஊர்.
ஒருசாலை மாணாக்கர் - சகபாடிகள், school - mates.

### 136

இவற்கு : இவன் + கு.
தொட்டு - தொடங்கி, முதல்.
விளையாட்டயர்ந்தோன் விளையாடினவன்.
வேற்றுத்தேயம் அந்நிய தேசம்.
அடவி - காடு.
அரிமா - சிங்கம்.
பரீக்கை - பரீக்ஷை.
எறிந்து - தள்ளி.
சேய்மை - தூரம்.
மற - கொடிய.
ஆவி - உயிர்.
வாங்கிற்று - கவர்ந்தது.

### 137

அறைதி - சொல்லாய்.
திவசம் - தினம்.
வலையன் - செம்படவன்.
பிற்றை ஞான்று - மறுநாள், நாளை.
கொழு - கொழுத்த
இறந்தமை - போயினமை.
அறிவுறுத்துழி - தெரிவித்த பொழுது.
நிலைபெயரல் - இடம்விட்டுப் போதல்.
ஈண்டு - இங்கு.
நட்டோர் - நண்பர்.
நடமின் - நடவுங்கள்.
மற்சியம் - மீன் (மத்ஸயம்).

### 138

நீள்செவியன் - நெடுஞ்செவி
பைங்கூழ் - பசும்பயிர்.
தேக்கெறிந்து - ஏப்பமிட்டு.
கழிவின்று - கழிவதில்லை.
கானஞ்செய் - பாடு.
இசை - சங்கீதம்.
உழுநர் - உழவர்.

### 139

மந்தரன் - (lit.) மந்த சுபாவமுள்ளவன்.
தந்துவாயன் - weaver ; (lit.) நூலை இணைக்கிறவன்.
வத்திரம் - வஸ்திரம்.
வாகை - ஒரு மரம்.
சாலியன் - துணிநெய்வோன்.
வரம்பில் - அளவில்லாத.
சீரை - சீலை.
தரு - மரம்.
இயக்கன் . யக்ஷன்.
ஈரத்தம் - இரு கை.

### 140

திருமி - திரும்பி.
மாக்கள் - மனிதர்.
தலையால் - ஆளுக்கு, பேருக்கு.
பிழையாது - தவறாது.
வல்லோர் . சமர்த்தர்.
கிருபணன் - (lit.) லோபி.
சாற்று - சொல்.
தவசம் - தானியம்.
சிக்கம் - உறி.
சிறுவிலைக் காலம்-பஞ்சகாலம்.
காராடு - வெள்ளாடு.
வாம் பரி - தாவுகின்ற குதிரை.
ஈன்று - பெற்று.

**141**

பற்றுள்ளம் - ஆசைமிக்கமனம்.
கிருபணத்துவம் - உலோபம்.
சந்திரசேனன் - (lit.) சந்திரனைப்போற் பிரகாசிப்பவன்.
வலிமுகம் - குரங்கு.
ஆடலயர்வது - விளையாடுவது.
மடையன் - சுயம்பாகி (a cook).
குற்றேவல் - அடித்தொண்டு.
சதுரப்பாடு - சாமர்த்தியம்.
முசு - குரங்கு.
கலாம் - கலகம்.
வண்ணம் - விதம்.
குழீஇ - கூடி.
இங்ஙனே - இவ்விடத்தே.
ஒச்சி - வீசி.
வைத்தூறு - வைக்கோல்.

**142**

மருத்துவர் - வைத்தியர்.
அசுவம் - குதிரை.
ஆமாத்திரர் - வைத்தியர்.
அண்ணல் - அரசன்.
ஆனனம் - முகம்.
கடுவன் - குரங்கு.
சரசு - தடாகம்.
இவண் - இங்கு.
நாளம் - தண்டு.
கணம் - பேய்.
மர்க்கடம் - குரங்கு.
பிரசன்னமாயினேன் - மகிழ்ந்தேன், உன் கண்முன் தோன்றினேன்.
களம் - கழுத்து.
பதி - ஊர், நகரம்.

**143**

அரதனம் - இரத்தினம்.
தடம் - தடாகம்.
தோன்றல் - அரசன்.
தாழ - to bow.
இறுத்தான் - தங்கினன்.
கங்குல் - இரவு.
சாகாமிருகம் - குரங்கு. (சாகா - கிளை).
ஏந்தல் - அரசன்.
பதாதிகள் - காலாட்கள்.
பாரிடம் - பேய்.
சேர - ஒருங்கே.
பிலவங்கம் - குரங்கு.
வானுற - ஆகாயத்தை யளாவ.
இரங்கி - மனம்வருந்தி.
அத்தியாசை - பேராசை.

**144**

கோயில் - அரண்மனை.
பயந்தது - தந்தது.
எற்றுறந்து - என்னைவிட்டு.
ஆழி - சக்கிரம்.
காவலன் - அரசன்.
பத்திரசேனன் - (lit.) மங்களத்தைச் செய்கிற சைனியமுடையவன்.
கோமான் - அரசன்.
கட்டழகி - பேரழகி.
போந்து - வந்து.
அற்றம் - சமயம்.
பதிவிருக்க - to lie in wait.
சின்னாள்: சில் + நாள்.
பாங்கி - தோழி.
எல் - பகல்.
எல்லி - இரவு.
சூழ்ச்சி - உபாயம்.
கலிங்கம் - குதிரை.
கலினம் - கடிவாளம்.

**145**

ஈர்த்து - இழுத்து.

ஊர்ந்து - ஏறி.
சம்மட்டி - சவுக்கு.
மா - குதிரை.
தொன்மரம் - ஆலமரம்.
விளாசல் - அடித்தல்.
இரிகின்றனை - ஓடுகின்றாய்.
வெருண்டு - பயந்து.
கீசகம் - குரங்கு.
வாலம் - வால்.
கவி - குரங்கு.
இன்னல் - துன்பம்.
இடுக்கண் - துன்பம்.
இலங்கேசன் - இராவணன்.
திரிகூடாசலம் - திரிகூடமலை.
பேராற்றல் - பெருஞ்சக்தி.
சிதடன் - குருடன்.

146

மதுசூதனன் - விஷ்ணுபெயர்களுள் ஒன்று; (lit.) மதுவென்னும் அரக்கனைக் கொன்றவன்.
சார்வபௌமன் - (உலக முழுதையும் ஆளும்) அரசன்.
சண்டகருமன் - (lit.) பயங்கரமான செயலை யுடையவன்.
புலராளவும் - உலரும்வரை.
நிலன் - நிலம் (போலி).
குளன் - குளம் (போலி).
நிற்றி - நில்.
நானம் - ஸ்நானம்.

147

வயிற்றழல் - பசித்தீ.
கடிதில் - விரைவில்.
மறுக்கம் - வருத்தம்.
அரிவை - பெண்.
விரூப - விகார ரூபத்தை யுடைய.
தேயம் - தேசம்.
மண்டை - ஓடு (bowl).
அரயன் - அரசன்.
கோடும் - கொள்ளுதும்.
சுயம்வரன் - தானாகவே வரிப்பவன்.
கடி - மணம்.

148

வயம் - வசம்.
அணங்கு - ஸ்திரீ.
பொறியிலி - குருடன் (கட்பொறி இல்லான்).
சுல்லி - அடுப்பு.
கண்ணறை - குருடன் (கண் அற்றவன்).
மாட்சி - பெருமை. இங்கு தன்மை என்னும் பொருளில் வந்தது.
சீற்றம் - கோபம்.
சேறல் - செல்லுதல்.
புயங்கம் - பாம்பு.
பனவன் - வேதியன்.
உயல் - உய்தல்.

149

ஆரியன் - குரு.
ஊறு - இடையூறு.
ஆய் - தாய்.
வேசற்று - களைத்து.
ஞெண்டு - நண்டு.
அரா - பாம்பு.
பணி - பாம்பு. (பணம் - படம்).
சூழ்வுழி - ஆலோசிக்குமிடத்து.